


| சிலம்பு ௩௨ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯அஅ, புரட்டாசி அக்டோபர், 1957 | பரல் ௨ |
|---|---|---|

# செய்யுளைச் சிதைக்கலாமா?

மொழியின் செம்மையும் சிறப்பும் அம் மொழியின்கண் நிலவிவரும் இலக்கிய இலக்கண விளக்கத்தால் அறியப்படுவன. உலகிடைக் காணப்படும் மொழிகளுள் பல மொழிகளுக்கு இலக்கணங்களே அமையவில்லை. வேறு சில மொழிகளுக்கு அவை அமைந்தும் செம்மை பெறவில்லை. பின்னும் சிலவற்றிற்கு நிரப்பியனவாகவில்லை. மொழிக்கு உயிர்போன்றிருப்பது இலக்கணமே. மொழிபயில் மக்கட்குழுவினுக்கு உயிர்போன்றிருப்பது ஒழுகலாறே. அவ்வொழுகலாற்றினை வரைசெய்து காத்துநிற்பது அறநூற்களே. பூக்கள் தனித்துக் கிடப்பின் அணிந்து பயன்பெறுவதெங்ஙனம்? அவை சரம், கண்ணி, தொடை, மாலை எனப் பலவாகப் புனையப்பட்டு நம்மால் அணியப்படுகின்றன. அவற்றின் கட்டினை அறுத்துவிட்டால் அவற்றை நாம் அணிந்து இன்புற இயலுமா?

மேலும் சிறந்த ஆவின்பாலைப் பலவேறு நிலைகளாக அமைத்து நாம் பயன் கொள்கின்றோம். பால் தயிராகுங்கால் செய்யும் செய்கையால் அது கட்டிப்படுகின்றது. அப்பொழுது அது தயிர் எனப் பெயர் பெறுகின்றது. அந் நிலையில் அடையும் பயனை அதனை நெகிழச்செய்வதால் அடையமுடியாதல்லவா? நெகிழும்போது அது மோர் எனப் பெயர்பெறும். இலக்கண அமைதியுடன் இருக்குங்கால் அது செய்யுள் அல்லது பாட்டு என்று பெயர்பெறும். பாட்டுக்கள் ஓசை நயத்தாலேயே பெயர்பெற்றுச் சிறப்பெய்துகின்றன. அவ்வோசை நயத்தினை வரம்புபடுத்திக் காத்து நிற்பன 'அசையும், சீரும், தளையும்,

தொடையும், அடியும்' முதலியன. அவற்றைச் சிதைத்துச் சீர்குலைத்த இடத்தில் அவை சொற்றொடராகுமே யன்றிப் பாட்டாகா. சீர்குலைப்பவர் அடி வரையறையையும் குலைத்துக் கொண்டுகூட்டு முறையாக அமைத்துப் பதித்தால் பொருள் காணும் சிரமமும் மக்கட்கு இராதன்றோ? இன்னும் சின்னாட்களில் அங்ஙனம் செய்யவும் முற்படுவர். இத்தகைய பாட்டினைக் காண்பார் இப் பாட்டு எவ்வகை இலக்கணமும் அமையாத மொழி வளர்ச்சியில்லாத தாழ்ந்த மொழியினுக்கு உரியதென்று எண்ணவும் சொல்லவும் எழுதவும் முன்வருவரன்றோ? அதனால் நாமே நம் உயர்தனிச் செம்மொழியாம் அமிழ்தினும் இனிய தமிழ் மொழியினை இழிந்த நிலையினுக்குக் கொண்டு வந்துவிடுகின்றோம். விலைவரம்பில்லாப் பொன்னும் மணியும் பொருந்தத் தொகுத்துள்ள கருவூலமாம் இருப்புப் பேழைக்கு மிகச் சிறந்த வியத்தகு பூட்டமைத்துக் காப்புச் செய்கின்றோம். அப் பூட்டின் அருமை பெருமையால் அதனைத் திறப்பார்க்கு அப் பூட்டின் தன்மையைப்பற்றி முன்னறிந்து கருத்துட் பதியவைக்க வேண்டிய சில குறிப்புக்கள் உளவாகும். அவற்றைக் கற்கமுடியாது அப் பூட்டையே எடுத்தெறிந்து கதவினைத் திறந்து வைத்தால் எவர்க்கும் எளிதாய் இனிதாய்ப் பயன்பெறும் என்று எவரேனும் எண்ணுவரோ? எண்ணின் அதனை அறிவுடையார் எவரேனும் ஏற்பரோ? ஏற்பின் அவர்தாம் அறிவுடையார் ஆவரோ? ஆய்ந்து கூறுமின். சுவைப் பொருள்களின் கலப்பால் நறுஞ்சுவை விஞ்சிக் கழிபேரின்பம் எய்துகின்றனம். அத்தகைய சுவைக் கலப்பினாலேயே பண்டங்களும், கறி வகைகளும், சோறும், குழம்பும் பலவேறு வகையான பெயர்பெற்று வெவ்வேறு வகையான நற்பயனை நமக்குத் தந்து நம்மை இன்புறுத்துகின்றன. உண்பார் அவற்றுடன் கலந்த கலவைப் பொருள்களை அமைத்தார்பாற் கேட்டுணர்ந்து தாமும் அங்ஙனம் அமைக்க முன் வருவதுதான் அறிவுடைமையாகும். அதனை விடுத்து மடியராய்க் கலப்புப் பொருள்களைக் கலவாது வெவ்வேறாக வைத்துண்பதே ஏற்புடைத்து எனக் கரைவராயின் என் செய்வது? சோறெடுப்பியினை (Tiffin Carrier) அடுக்கவும், தொடுக்கவும், பின் எடுக்கவும் வருத்தப்பட்டுத் தனித்தனியாக இருப்பதே சால்புடைத்தெனச் சாற்றுவராயின் எவர் ஏற்பர்?

எனவே, பதிப்பாளரும் வெளியீட்டாளரும் உன்னிப்பாக விருந்து முன்னோர் கோலிய வரம்பினைக் காத்துப் பாட்டைப் பாட்டாகவே அச்சிட்டுப் பாட்டின் தெளிவையும் பொருளையும் பெருமக்கள் எளிதின் உணரும்பொருட்டு ஒவ்வொரு பாட்டின் அடியிலும் சொற்களைச் சந்திபிரித்து அமைத்தல் நன்றாகும்.

மேலும் வாய்ப்புளதேல் கடின சொற்களுக்குப் பொருளும் எழுதி அமைக்கலாம். எழுத்தினைத் தனித்தனியாகக் கற்கும் நிலை கடந்து கூட்டிக் கற்பதும், அதுவும் கடந்து சொற் சொல்லாகக் கற்பதும், அந் நிலையும் தாண்டிச் சொற்றொடராகக் கற்பதும் எவ்வளவு முயற்சியின்மேல் அமைவனவாகும். இம் முயற்சிகட்கு வருந்தி எழுத்தெழுத்தாகக் கற்பதும் அதற்கேற்ற வாறு பதிப்பதும் ஏற்புடைத்தென்று எவரும் கூசாது கூறுவரோ? அது போன்று பாட்டினைப் பயில்வதற்கும் முயற்சி எடுக்குமாறு தூண்டுவதும் துணை செய்வதுமே அறிவுடையோர் கடமையாகும். அத்தகைய வழியில் வந்து திருந்திய நம் அருந் தமிழ்மொழியினைப் பொருந்தப் போற்றுவோமாக. இன்றேல் வருமாறு சிதைவுகட்கிடனாய்த் தமிழ் அழிந்தொழிவது திண்ணமாகும்.

இப்பொழுது வெளிவந்துள்ள மலிவுப் பதிப்பைக் கண்ணுறுவார் அசை, சீர் முதலியன தோன்றுவாறு சொற்களை மனம் போனபடி யெல்லாம் பிரித்துச் சிதைத்திருக்கும் சீர்குலைவினைக் காண்பர். கண்டு மனம் வருந்துவதன்றி வேறென் செய்வர். அத் திருப்பாட்டைப் பாடிய பண்டைப் பெரும்புலவர்கள் இப் பொழுது இருந்து காண்பதாக வைத்துக்கொண்டால் அவர்கள் எங்ஙனம் கருதுவர்? மகிழ்வரோ? வருந்துவரோ? கூறுமின். இதுபோல் பிறமொழியினர் எவரேனும் பிரித்ததுண்டோ? பன்னாள் முயன்று குயவன் கைபுனைந்தியற்றிய அழகுசால் பாண்டத்தைத் தடியடிக்காரன் ஒருநொடியில் நூறாயிரம் சில்லுகளாக நொறுக்கித் தள்ளுவதை ஒத்தன்றோ இஃது இருக்கின்றது?

மெய்ம்மையாக மொழியினைக் காக்கும் மொய்ம்பினரே முன்வருக! இங்ஙனம் செய்யுளைச் சிதைப்பதால் செந்தமிழே சிதையும் என்னும் வாய்மையினை எழுத்தாலும் பேச்சாலும் வலியுறுத்தி விளக்குக. மொழியின் ஆக்கம் பேணுதலே நமக்குப் பேராக்கமாகும். நம் தாய்மொழிபோல் குறைவிலா நிறைவாய்த் தனித்தியங்கும் சிறப்பினதாய்க் கன்னித் தன்மை குன்றாது மன்னும் செம்மொழி உலகில் வேறேதும் இன்று. பிறமொழியாளர் எள்ளும் தன்மையில் நாம் நம் தமிழ்மொழி வெளிவர இடங்கொடுத்தல் ஆகாதென்பதை உன்னுக. பதிப்பாளர்களும் நன்கு நாடித் தவறகற்றி நலம்புரிவார்களாக. அதுவே அனைவர்களாலும் வரவேற்கத்தக்கதாகும்.

# செயற்கைத் திங்கள்

உருசிய நாட்டு விஞ்ஞானிகள் 4 - 10 - 1947 அன்று ஒரு செயற்கைத் திங்களை வானவெளியில் மிதக்க விட்டுள்ளார்கள். இது வானவெளிப் பயணத்தின் முதற்படியாகும் இஃது உருசிய நாட்டு ஆராய்ச்சி நிலையங்களில் உருசிய விஞ்ஞானிகள் நீண்ட காலமாக நடத்திய ஆராய்ச்சியின் பயனாகும்.

இச் செயற்கைத் திங்கள் பூமியினின்று 560 கல் உயரத்தில் சுற்றிவருவதாகக் கூறப்படுகிறது. பூமத்தியரேகையிலிருந்து 65 டிகிரி கோணத்தில் இது செல்கிறது. இதன் குறுக்களவு 23 அங்குலமும் 180 இராத்தல் எடையுமுள்ளதாகும். இது பூமியை ஒருமுறை சுற்றிவர 95 நிமிடங்கள் ஆகின்றன. இதை வானவெளியில் உந்தித் தள்ளுவதற்கான இராக்கட் இதை வினாடிக்கு 8,800 மீட்டர் வேகத்தில் உயரே தூக்கிச் சென்றது. இப்பொழுது இது மணிக்கு 18,000 கல் வீதம் பூமியைச் சுற்றி வருகிறது. ஞாயிறு தோன்றும்பொழுதும், மறையும்பொழுதும் தொலைநோக்கிக் கண்ணாடிவழி இதைக் காணலாம்.

இச் செயற்கைத் திங்களின் உட்புறத்தில் இடம் சிறிதும் வீணாகாதவாறு பல்வகைக் கருவிகள் வைக்கப்பட்டுள்ளன. இது வெப்பநிலை, வாயுமண்டல அழுத்தம், காஸ்மிக் கதிர்கள், ஊதா வெளிக் கதிர்கள், இழுப்பாற்றல், உற்கைகள், பூமியின் மேற்பரப்பு ஆகியவற்றைப் பற்றிய விவரங்களை அறிந்து பதிவு செய்து பூமியில் உள்ளோருக்கு உடனுக்குடனே தெரிவிக்கும். எரிமீன்களால் உண்டாகக்கூடிய மிக நுட்பமான அசைவுகளையும் பதிவு செய்து, தெரிவிக்கக் கூடியதாம். பூமி, இதர கோள்களின் ரேடியோப் படங்களை இஃது அனுப்பக்கூடும். இத்தகைய புகைப்படமெடுக்கும் கருவிகளை இதனுள் பொருத்தியிருப்பதாகத் தெரிகிறது. இப்படங்களை 400 மடங்கு பெரிதாக்கின் முக்கியமான பல செய்திகள் கிடைக்குமெனத் தெரிய வருகிறது.

காற்று மண்டலத்தின் மேற்பரப்பின் அழுத்தம் எவ்வளவு என்பது திட்டவட்டமாகத் தெரியாததால் இச் செயற்கைத் திங்கள் எவ்வளவு நாட்கள் இருக்குமென்று தற்பொழுது சரியாகச் சொல்ல இயலவில்லை. எனினும் நியூயார்க் விஞ்ஞானி டாக்டர் ஜே. ஆலன் ஹைறனக் என்பவர் இஃது இருபது ஆண்டுகள் பூமியைச் சுற்றிவரக்கூடுமெனத் தாம் கருதுவதாகத் தெரிவித்துள்ளார்.

இச் செயற்கைத் திங்கள் வான மண்டலப் பயணத்திற்கும், திங்களை அடைவதற்கும் முதற்படியாகும்.

---

# மறைமலையடிகளார்

## ஏழாம் ஆண்டு நினைவு விழா நிகழ்ச்சிகள்

பல்லாவரம் பொதுநிலைக் கழக ஆசிரியரும், தமிழகத்தில் தனித்தமிழ் இயக்கத்திற்கு வித்தூன்றியவரும், தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மும்மொழி வல்லுநரும் பேரறிஞரும் ஆகிய மறைத்திரு. மறைமலையடிகளாரின் ஏழாம் ஆண்டு நினைவு விழா கடந்த 15-9-57-இல் சென்னை இராசாசி மண்டபத்தில் சிறப்புற நடைபெற்றது. விழா பிற்பகல் 4-30 மணியளவில் துவங்கப்பெற்றது. சை சி. நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் உயர்திரு வ. சுப்பையாபிள்ளையவர்கள், சென்னை நகராண்மைக் கழகத் தலைவர் உயர்திரு. கே. என். சீனிவாசன் அவர்களைத் தலைமைதாங்கி நடத்தித் தருமாறு கேட்டுக்கொண்டனர். பின்னர் திரு. சீனிவாசன் அவர்கள் தலைமையுரை ஆற்றினர். அவர் பேசியபோது, "தமிழ்நாட்டில் மறைமலையடிகள் புதியதோர் ஊழியை உண்டுபண்ணினர். ஒவ்வொரு மனிதனும் தன்மானத்தோடு வாழவேண்டும் என்னும் உணர்வை உண்டு பண்ணினர். மதத்தின் பெயராலும் சாதியின் பெயராலும் ஒருவனை யொருவன் அடக்கியாளும் கொடுமைபோகவேண்டும் என அவர் விரும்பினர். முதன் முதல் ஆரிய திராவிட நாகரிகங்களின் வேறுபாட்டைப்பற்றி எடுத்துரைத்தவர் அவரே! தூய தனித்தமிழில் எழுதமுடியும் பேசமுடியும் என்பதை எடுத்துக் காட்டியவர் அவரே" என்று குறிப்பிட்டார்.

அடுத்து, திரு. இளவழகனர், பேராசிரியர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனர், மயிலை சிவ. முத்து, டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை, சென்னை தியாகராயர் கல்லூரித் தலைவர் திரு. எம். கே. சண்முகம், நெல்லை இந்துக்கலாசாலைத் தமிழாசிரியர் திரு. அ. க. நவநீத கிருட்டிணன், நாவலர் இரா. நெடுஞ்செழியன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். தியாகராயர் கல்லூரித் தலைவர் திரு எம். கே. சண்முகம் மறைமலையடிகளாரின் திருவுருவப் படத்தைத் திறந்துவைத்தார்.

சொற்பொழிவாற்றியோரின் பேச்சுச் சுருக்கம் வருமாறு :

"கடலில் ஆழச் சென்று முத்து எடுப்பதுபோல் இருந்தது மறைமலையடிகளாரின் ஆராய்ச்சி அறிவு. அவர் தமிழை நன்கு அறிந்த பெரியார். இன்றுள்ள பல இயக்கங்களுக்கும் அவரே மூலம். அவர் சிறந்த கடைகால் அமைத்துக் கொடுத்து விட்டார் இனி அதன்மீது சிறப்பாகக் கட்டிடம் கட்ட வேண்டியது தமிழர் கடமை."

—திரு. இளவழகனர்.

"மறைமலையடிகள் உரை நடையிலே புரட்சி கண்டவர். அவரது எழுத்து நடை தேனினும் இனிய செந்தமிழ் நடை. புது ஆராய்ச்சிக் கண்கொண்டு பழைமையை ஆராய்ந்து பல உண்மைகளை அவர் மக்களுக்கு எடுத்துரைத்தார். காளிதாசரின் சாகுந்தலத்திற்கு சிறந்த உண்மையான மொழிபெயர்ப்புச் செய்துள்ளார். அதற்கு ஈடானது இதுவரை எங்கும் எழுந்ததில்லை."

—பேராசிரியர், தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர்.

"இந்தி திணிக்கப்படும் இந்த நேரத்தில் மறைமலையடிகள் நம்மோடு இல்லையே என்று வருந்துகிறேன். மறைமலையடிகளாரின் நூல்கள் என்றும் அழியாச் செல்வமாகும். நாம் நூல்களைப் போற்றிப் பாதுகாப்பதுபோல் புலவர்களையும் புரத்தல் வேண்டும்."

—மயிலை. சிவ. முத்து.

"அடிகளார் தமிழ்நாடெங்கும், வீடுகளிலும் மக்கள் மனக்கோயில்களிலும் வீற்றிருக்கின்றூர். தேமதுரத் தமிழோசை அடிகளாரின் வாயிலிருந்து வரக்கண்டேன். நமக்கு வேண்டுவது நல்ல தமிழ் என்று அடிகளார் அறிவுறுத்தினுர். அடிகளார் பெயரை மாற்றிக்கொண்டதுபோல், பின்னுல் மாற்றிக் கொள்ளும் நிலைவராமல் இனியேனும் பிறக்கும் குழந்தைகளுக்கு நல்ல தமிழ்ப் பெயரிடுங்கள். நமக்கு இடர்கள் பல திசைகளிலிருந்து வந்துகொண்டிருக்கின்றன. தமிழர் ஒருமுகப்பட்டு ஒற்றுமையோடு நிற்பின் இனி எந்த நாட்டுமொழியும் நம்மீது படையெடுத்து வரமுடியாது. மறைமலையடிகளார் வடநாட்டு வாடையைத் தடுத்து நிறுத்தினுர். முதலில் வேங்கடமும், அடுத்துத் திருத்தணிகையும் அதற்கும் அப்பால் மறைமலையும் அந்த வாடைகளைத் தடுத்தன. பாரத நாட்டிற்குப் பொது மொழியாகும் தகுதியுடையது தமிழ் ஒன்றேயாகும். தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும். இதை விடுத்து வேற்றுமொழியை ஏற்பது அறிவீனமாகும். நாமனைவரும் ஒருமுகப்பட்டு ஒரே குரலில் பேசுவோமாயின் நம் கருத்து நிறைவேறும்."

—டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை.

"அளக்கலாகா முற்றுமுணர்ந்த நாவலராக மறைமலையடிகள் விளங்கினுர். அடிகளாரை இருபதாம் நூற்றுண்டுச் சேக்கிழார் எனலாம்."

—நெல்லை, திரு. அ. க. நவநீதகிருட்டிணன்.

"மறைமலையடிகள் மூட்டிய கனல் திக்கெட்டும் பரவி யிருப்பதைக் காண்கிறோம். இந்த நாட்டில் எத்தனையோ பெரியார்கள் தோன்றினார்கள்—தோன்றுகிறார்கள். ஆனால் ஒரு சிலர்தாம் சாகாத் தலைமுறையாகத் திகழ்கின்றனர். அந்த சாகாத் தலைமுறையைச் சேர்ந்தவர்தாம் மறைமலையடிகள். நாட்டிலே நல்ல தமிழ் நடமாடச் செய்தவர் அவர்; அழகு தமிழ் விளங்கச் செய்தவர் அவர்; அடிகளார் யாருக்கும் அஞ்சாமல், இழித்தும் பழித்தும் கூறுபவர்களைக் கண்டு சிறிதும் பின் வாங்காமல் புலவர்கட்கெல்லாம் எடுத்துக்காட்டாக—வழிகாட்டியாக விளங்கியவர். அவர் தம் கருத்தைக் கட்டிக்காக்க அரண் அமைத்துக் கொண்டார். இறுதியில் வெற்றியும் பெற்றார். அவர் காட்டிய வழியில் தான் இன்றைய புலவர் உலகம் செல்கிறது. பிறமொழியில் இருந்த என் பெயரைத் தூக்கியெறிந்து விட்டு நல்ல தமிழில் வேறு பெயரை வைத்துக்கொண்டேன். அப்பொழுது என்னைக் கேலியும் கிண்டலும் செய்தவர் பலருண்டு. அப்பொழுதெல்லாம் மறைமலையடிகள் ஊட்டிய உணர்ச்சிதான் எனக்கு ஊக்கத்தையும் உறுதியையும் அளித்தது. அவர் அன்று விதைத்த விதை பூத்துக் காய்த்துக் கனியாகி இன்று பலன் கிடைக்கும் நிலையில் உள்ளது."

—நாவலர். இரா. நெடுஞ்செழியன்.

கழக ஆட்சியாளர் திரு. வ. சு. அவர்கள் அனைவர்கட்கும் நன்றி கூறும் வாயிலாக உருக்கமாகச் சில பேசினார்கள். அவை யனைத்தும் உணர்ச்சி ததும்பியதாக இருந்தன. அவை "மறைமலை யடிகளாரின் நூற்கள் அனைத்தையும் யாவரும் நன்கு பயிலுதல் வேண்டும். அவர்தம் திருப்பெயரால் நிறுவப்போகும் தமிழ்க் கல்லூரிக்கு உங்கள் அனைவர்களுடைய உளங்கனிந்த ஒத்துழைப்பை வேண்டுகின்றேன். எப்பொழுதும் உங்கள் ஒத்துழைப்பு முற்றாக இருக்குமென்று நம்புகின்றேன். இங்குச் சார்புபற்றாது எல்லாச் சார்பினரும் ஒருங்கு திரண்டு உவகையுடன் வெள்ளம்போன்று வந்திருப்பதே எங்கள் உள்ளத்தை மட்டுமல்லாமல் அவையோர் உள்ளங்களையும் உவகைக் கடலில் திளைக்கச் செய்கின்றது. அதுவே எங்களுக்குப் பேருக்கம் தருகின்றது. அவர்தம் விழாவை நாடு நகரம் வீடு முதலிய எல்லாவிடங்களிலும் ஆண்டுதோறும் சிறப்பாகக் கொண்டாடுதல் வேண்டும். எப்பொழுதும் தூய தமிழில் எழுதுதலும் பேசுதலும் செய்வதே அவர்க்கு நாம் செய்யும் மறவா நன்றியறிதலாகும்" என்பனவே.

# மறைமலையடிகள் தமிழ்க் கல்லூரி

மறைமலையடிகளாரின் நினைவாக, அடிகளார் வாழ்ந்த பல்லாவரத்தில் ஒரு தமிழ்க் கல்லூரி நிறுவ ஏற்பாடாகியுள்ளது. இக் கல்லூரியை நிறுவுவதற்கான இடத்தைத் தேர்ந்தெடுக்கும் பொருட்டுச் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. லட்சுமணசாமி முதலியார், சென்னைத் தியாகராயர் கல்லூரித் தலைவர் திரு. எம். கே. சண்முகம், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் ஆகியோர், கடந்த 16-9-57-இல் பல்லாவரம் சென்று கல்லூரிக்குத் தகுதியான இடமொன்றைப் பார்வையிட்டனர். மறைமலையடிகள் மன்றச் செயலாளரும் உறுப்பினரும் துணைவேந்தர் அவர்களை மாலைசூட்டி வரவேற்று அடிகளாரின் இல்லத்திற்கழைத்துச் சென்றனர்.

## 'சாகுந்தலம்' பற்றிய கட்டுரைக்குப் பரிசு

அடிகளார் தமிழ்க் கல்லூரியின் ஆக்க முற்குறி போன்று 3—10—1957-இல் 'சமக்கிருதச் சங்கச்' சார்பில் நிகழ்ந்த 'காளிதாசர் நினைவு நாள்' மிகவும் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. அப்பொழுது காஞ்சி காமகோடிப்பீட முதல்வர் மறைத்திரு. சங்கராச்சாரிய அடிகளார் அவர்கள் உளங்கனிந்து அக் காளிதாசர் அருளிய 'சாகுந்தலத்தின்' செவ்விய தமிழ் மொழி பெயர்ப்பு ஆசிரியர் மறைமலையடிகளாரின் நூலே எனக் கண்டு அவ் வுண்மையினைப் பாராட்டும் வாயிலாக 'மறைமலையடிகளார் தமிழ்க் கல்லூரி' மாணவர்க்குத் தமிழ்ச் சாகுந்தலப் பரிசாக ஆண்டு தோறும் நூறு வெண் பொற்காசுகளுக்குக் குறையாமல் வழங்கிவர வேண்டுமென்று அருள் புரிந்துள்ளார்கள் எனவும் அதன்பொருட்டு ஐயாயிரம் வெண்பொற்காசுகள் முதலீடு செய்துள்ளார்கள் எனவும் அறிகின்றோம். இஃது அடிகளார் யாத்த விலை வரம்பில்லா அருந்தமிழ் மெய்ந்நூல்களனைத்திற்கும் புரவலர் பலரும் போற்றிப் பாராட்டத் தூண்டும் முற்படியாகும் என மொழிவது ஏற்புடைத்தாகும்.

---

## கழக ஆட்சியாளர் திரு. வ. சு. அவர்களின்

# மணிவிழா வாழ்த்துக்கள்

சுழன்றுந் தமிழுலகஞ் சுப்பையாப் பிள்ளை
முழங்குந் தமிழ்ப்பற்றின் மூளை—வழங்கும்
பலபல ஆழியவன் பைந்தமிழுக் கென்று
நிலவுக நின்று நிலத்து.

**திரு. ஞா. தேவநேயன்.**
*அண்ணாமலைநகர்.*

செந்தமிழால் கழகம்எனச் செப்பின் சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தோன்றும்
அந்தபெருங் கழகமதைச் செப்பின் எங்கள்
அன்புருவாம் சுப்பையா பிள்ளை காண்பார்
வந்தஅறு பானாண்டு நிறைந்த பிள்ளை
வகையாய் நாளும்தமிழின் தொண்டே யாற்றி
இந்தவுல கினிலென்றும் சிறக்க வாழி
எனயானும் என்முருகை இறைஞ்சு வேனே.

**வித்துவான், ஆ. சிவலிங்கனர்.**
*மயிலம்.*

நெல்லைநகர்ப் பேரெங்கும் நிறுவுசைவ
சித்தாந்தக் கழகம் தோற்றி
நல்லமுறை யிற்பதித்த நூல்கட்கு
நாட்டாட்சிப் பரிசும் பெற்றே
ஒல்லைஅதன் உயர்ச்சிக்காம் துறைமுறைகள்
உண்டாக்கும் உணர்வாற் செய்வன
நல்லஉல கினில்எவரும் மறவாதே
போற்றுவர்இந் நாட்டுரிமை யாமே.

**திரு. பு. சி. புன்னைவனநாதர்**
*திருநெல்வேலி.*

சீரார் சைவந் தழைத்தோங்கச் செந்தமிழ் நாளும் செழித்தோங்க
நீரார் கடல்சூழ் நீணிலத்தில் நிலைத்த கலைப்பணி செய்தவரிற்
பேரார் நம்பி சுப்பையா பிள்ளை செய்த பணிபோல
யாரார் செய்தார் என்றாலே யாரும் இல்லை யெனமொழிவேன்.

**ஆசுகவி, கீர்த்தனை அரசு, புலவர், பி. வி. அப்துல்கபூர் சாகிப்**
*திருவையாறு.*

சைவசித் தாந்தந் தழைக்கத் தமிழ்தழைக்கத்
தெய்வநெறி யோங்கத் திருவோங்க—வையமதில்
சொல்லாண்ட பன்னூல்கள் தோற்றுவிக்கும் சுப்பையா
பல்லாண்டு வாழ்க பரிந்து.

**கிருபானந்தவாரி.**

நேராரும் நேர்நின்று இசைபுகல
    நிகரில்லா ஆற்றல் பெற்றோன்
பேராரும் புகழ்வேண்டாப் பெருமனத்தான்
    அரும்பணிகள் கருத்திற் கொண்டே
ஆராரும் எதிர்த்தாலும் அஞ்சாமே
    அருவினைகள் ஆக்கும் அண்ணல்
பாரோரில் இவனொருவன் என்றென்றே
    பாராட்டற் பாலன் அன்றே.

இவ்வாறு அரியசெயல் இவன்செய்தே
    இணையில்லாப் பேர்பெற் றானே
எவ்வாறு இவன்திறத்தை இயம்புவலோ
    எமது தனித் தமிழை எங்கும்
செவ்வைபெறக் கொடிகட்டித் திகழவிட்டான்
    இவனன்றோ தமிழின் செல்வன்
இவ்வாறே இவன்புகழை இனித்தமிழர்
    பாடிடுவர் இனிமை ஆக.

**வித்துவான், மறை. திருநாவுக்கரசு,**
*தூத்துக்குடி.*

பழகற் கினிய பண்பாளன் படிசொல் புகழி னுருவுடையான்
அழகிற் சிறந்த பதிப்புற்றெம் அரிய தமிழை விளக்குறுப்போன்
கழகத் துயர்வு தனதாகக் காலமெல்லாம் பணிபுரிவோன்
குழகர்க் கான்றோர்க் குறவினன்இக் குவலயத்தே வாழியவே.

**வித்துவான், முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்,**
*முதல்வர், தருமபுர ஆதீனப் பல்கலைக் கல்லூரி.*

மெச்சும் அழகுநிறை செந்தமிழாம் மெய்த்தேருக்கு
அச்சாணி போன்றிலங்கும் ஆன்றவன்சீர்—பொய்த்தலிலா
சுப்பையா பிள்ளை அறுபதாந் தூயவிழா
மெய்ப்புகழாய் மல்க மிளிர்ந்து.

**வித்துவான், ந. சேதுரகுநாதன்,**
*விருதுநகர்.*

"உலகப் பொதுமொழி உயர்தமிழ் மொழியே
உலகினர் கொளப் பொதுச் சமயம் ஓங்கும்
சைவமே உலகீர் ! சார்ந்து நலம்பெறும்
தவமாய் வாழ்நாள் தழைத்து வளம்பெற
வழியிது காண்மின் வாழி வாழி"யென
மொழிவதே கடமையாக் கொண்டு முனைந்து
தொண்டுகள் ஆற்றிடும் தோழமைத் தம்பி
விண்புகழ் சுப்பைய வேள்இன் றினிதே
..........................................
நன்னலம் நாடி நீடூழிவா ழியவே.

**திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை,**
*சங்கரநயினார்கோவில்.*

திருவாளர் சுப்பையா பிள்ளை அவர்களின் அறுபது ஆண்டு நிறைவு விழாக் கேட்டு மகிழ்ச்சி. என் மனமார்ந்த வாழ்த்துக்களை அவர்களுக்குத் தெரிவிக்கக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. எம். பக்தவத்சலம்,**
*அமைச்சர், சென்னை.*

பல்வகைத் தமிழ் நூல்களையும் சைவ நூல்களையும் சிறந்த முறையில் அழகாக அச்சிடுவித்து யாண்டும் பரவச்செய்து தமிழ்த் தாய்க்கும் சைவ சமயத்திற்கும் பல்லாண்டுகளாக ஒப்பற்ற தொண்டாற்றிவரும் திருவாளர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் நீடுவாழுமாறு எம்பெருமானை வேண்டுகின்றேன்.

**திரு. டி. வி. சதாசிவபண்டாரத்தார்,**
*அண்ணாமலைநகர்.*

இப்புவி தன்னில் நாளும் இயைந்தநற் பெயரும் நல்ல
**சுப்பையா** என்று கூறத் தோமறக் கொண்ட நல்லோன்
தப்பிலாத் தமிழ்த்தொண் டிற்குத் தன்னையே உரிமை செய்தோன்
இப்பெரி யவன்றான் இந்நாள் இருமூப்ப தாண்டைப் பெற்றான்.

இந்தநல் உலகந் தன்னில் இருமூப்ப தாண்டைப் பெற்ற
செந்தமிழ்த் தொண்டன் இன்னும் சிறந்துபல் லாண்டு வாழ்ந்து
நந்தமிழ் மொழிக்கு வேண்டும் நற்றொண்டு செய்து வாழக்
கந்தனு ரடிகள் போற்றிக் கவியிது கூறி னாமே.

இருமுப்ப தாண்டைப் பெற்ற இனியசுப் பைய வேளே !
இருமுப்ப தாண்டின் மேலும் இன்னும்இவ் உலகில் வாழ்ந்து
தருமுப்பால் அறத்தைச் செய்து தரணியில் நீடு வாழ
இருமுப்பால் முகத்தைப் பெற்றோன் இணையடி வழுத்தும் யாமே.

**—கழக, அச்சக அலுவலாளர்கள்.**

சிறந்த சமய, இலக்கிய நூல்களை அழகிய முறையில் வெளியிட்டுச் சைவத்திற்கும் தமிழிற்கும் அருந்தொண்டாற்றிவரும் திரு. பிள்ளையவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ இறையருளை வழுத்துகின்றேன்.

**திரு. கருமுத்து தியாகராசர்,**
மதுரை.

பல்லாற்றானும் தமிழ்ப்பணி புரிந்துவரும் திரு. பிள்ளையவர்கள் மேலும் மேலும் தமிழ்ப்பணி புரிந்து இன்னும் பல்லாண்டு இன்பமாய் வாழ அருள இறைவனை வேண்டுகிறேன்.

**திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்,**
அண்ணாமலைநகர்.

மக்கட்கு இருகண்ணனைய மொழியினையும் சமயத்தையும் முழு மூச்சுடன் காத்து வளர்த்துவரும் தங்கள் வாழ்நாள் இறையருளால் நிறைநலம் கனிந்து நீடுவாழ்வதாக.

**வித்துவான், அ. க. நவநீதகிருட்டிணன்,**
திருநெல்வேலி.

திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் இன்னும் பன்னெடுங்காலம் நல்லுடல் நலத்தோடு வாழ்ந்து, இன்னும் பல அரிய தமிழ்நூல்களை அச்சியற்றி, தமிழ்கூறும் நல்லுலகிற்கு வழங்கும் நற்றொண்டினைச் செய்து சிறப்படைய வேண்டும் என இந்த நல்ல நாளிலே வாழ்த்துகின்றேன்.

**திரு. கி. ஆ. பெ. விசுவநாதம்,**
திருச்சி.

நல்ல பணிகளை மேற்கொண்டுள்ள தாங்கள் பல்லாண்டு வாழ ஈசன் அருள்புரிக.

**டாக்டர், ரா. பி. சேதுப்பிள்ளை,**
சென்னை.

உயர்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து நம் தமிழ்த்தாய்க்கு நற்பணியாற்ற எல்லாம் வல்ல இறையை வேண்டுகின்றேன்.

**திரு. எம். எம். தண்டபாணிதேசிகர்.**
அண்ணாமலைநகர்.

கழகத்தின் வாயிலாக திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் செய்த தமிழ்த்தொண்டு போற்றத் தக்கது. இறைவன் அவர்களுக்கு நீண்ட ஆயுளை உதவித் தமிழ்த் தொண்டினை வலிமையாக்க வேண்டுகிறேன்.

**டாக்டர், மா. இராசமாணிக்கனார்.**
மதுரை.

தமிழ்மொழியின் தனிப்பெருஞ் சிறப்பினைப் பிள்ளையவர்கள் பல்லாற்றானும் பரவச்செய்து வருகின்றார்கள். 'கைக்கணி செய்வன கழகப் பதிப்புகள்' என அனைவரும் பாராட்டத்தக்க முறையில் மேதகு நூல்களைக் கோதறு முறையில் கண்கவர் வனப்புடன் வெளியிட்டுவருகின்றனர். பிள்ளையவர்களது தமிழ் புரக்கும் தனிவாழ்வு இன்னும் பல்லாண்டு எழிலுடன் வளரத் திருவருளை வந்திக்கின்றேன்.

**திரு. மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை.**
காஞ்சி.

திருவாளர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் எவ்விதக் குறையுமின்றி மேலும் அறுபதாண்டுகட்கு மேலாக வாழ்ந்து சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்குச் சிறந்த தொண்டாற்றப் பெரிதும் விழைகின்றேன்.

**பெரியார் ஈ. வே. ரா.**
ஈரோடு.

தமிழ் நூல்களைப் பிழையின்றியும் அழகாகவும் வெளிப்படுத்துவதில் முதன்மைசான்ற கழகத்தின் ஆக்கத்திற்குத் திரு. பிள்ளை அவர்களின் தொண்டு பேருதவியாக இருந்துவந்திருக்கிறது. அன்றியும், தமிழுக்கு இடர்சூழும் என்று தோற்றுகின்ற நேரங்களில் திரு. சுப்பையா பிள்ளை பன்முறை முன்வந்து அவ்விடர்களைக் களைதற்குரிய வழிவகைகளைக் கண்டிருக்கிறார். அவர் இன்னும் பல்லாண்டு வாழ இறைவனை இறைஞ்சுகின்றேன்.

**டாக்டர், அ. சிதம்பரநாதன் செட்டியார்.**
அண்ணாமலைநகர்.

தமிழ்மொழி, தமிழ்ப்பண்பாடு, தமிழிலக்கியம், தமிழிசை, தமிழ் மறை எனும் இவைபோன்ற பல துறைகளிலும் தமிழ்மக்களிடையே உணர்ச்சியையும் ஊக்கத்தையும் ஆக்கிய அருஞ்செயலுக்கு இன்று உரிமை பாராட்டத்தக்கதொரு நிலையம் இக் கழகமேயாகும். இக் கழகத்தின் உயிர்நாடி திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களே என்பதை யாவரும் அறிவர். எனவே கழகத்தின் புகழ் அவருடைய புகழேயாகும்.

**பண்டித. கா. பொ. இரத்தினம்.**
இலங்கை.

திரு. வ. திருவரங்கம் பிள்ளை அவர்களின் கனவுகளை நனவாக்கிய தீரர் வ. சு., வ. தி. என்ற மலை மறைந்ததும் மயங்கிச் சோர்ந்துவிடாமல் வீறுடன் வினைசெய்த வ. சு. வை மறப்பது எங்ஙனம்? செந்தமிழ்ச் செயல்வீரர் 'வ. சு.' வாழ்க! வாழ்க! என வாழ்த்தி மகிழ்கின்றேன்.

**வித்துவான், வீரசிவம்.**
திருவாவடுதுறை ஆதீனம்.

தாங்கள் இன்னும் பல ஆண்டுகள் வாழ்ந்து தமிழிற்கும் தமிழ்த் தாய்க்கும் தொண்டாற்ற ஈசன் அருள்புரிவாராக.

டாக்டர், ப. சுப்பராயன், M.P.
சென்னை.

அண்ணலார் அரங்கனார் கண்டதெல்லாம் அவர் தம்பியார் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களும் ஐயந்திரிபறக் கண்டனர். இற்றைநாள் வரை திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் அக் கழக வாயிலாய் ஆற்றி யுள்ள திருத்தொண்டுகள் சாலச் சிறந்தனவாம். அமரர் ஆகிவிட்ட அரங்கனார் ஆவி இற்றைநாள் தந்தம்பியார் ஆற்றியுள்ள செயல்களை உணருமாயின் அது தன்,

“..................தம்பியை
ஐயன் வல்லன்என் னுருயிர் வல்லனான்
உய்ய வந்தவன் வல்லன்”

வாழ்க! வாழ்க! வாழ்க! என்று மனமுவந்து வாழ்த்தும் என்பது திண்ணம். அப் பெரியார் இன்னுமொரு அறுபானாண்டு வாழ இறைவனை வழுத்தும்,

பெருமழைப் புலவர். சோமசுந்தரனார்.
கீழப்பெருமழை.

உங்கள் பெருமுயற்சியாலேயே தமிழகத்தில் ஒரு நூறாயிரம் மக்கள் கையில் உலகப் பொதுமறையாம் திருக்குறளைக் காணுகின்றோம். பல நூறு திருக்குறள் மன்றங்கள் செய்யும் பணியை நீங்கள் ஒருவர் செய்துள்ளீர்களென்றால் உங்களை எவ்வளவு பாராட்டினாலும் போதாது. உங்கள் ஆராய்ச்சியில் மலர்ந்த திருக்குறள்தான் எத்தனை வடிவங்கள். உள்ளங்கையிலடங்கும் வடிவமும் சட்டைப் பையிலடங்கும் வடிவமுமாக நீங்கள் குறளுக்குப் பல உருவங்கள் கொடுத்தீர்கள். இத்தகைய அரும் பணி செய்த தாங்கள் நிறைநலம் பெற்ற உடலுறுதியும் பல்லாண்டும் மல்குகவென வாழ்த்துகின்றோம்.

மதுரைத் திருவள்ளுவர் கழகம்.
மதுரை.

தாங்கள் தங்கள் ஒவ்வொரு பேச்சிலும், ஒவ்வொரு மூச்சிலும் தமிழ் தனிச் சிறப்பழியாது ஓங்கி வளரவேண்டுவதற்கு ஆவன யாவும் புரிந்து வருகின்றீர்கள். தமிழ் பிறமொழியாளர்களின் வஞ்சத்தானும் நம்மவர் களின் பற்றின்மையானும் தூய்மை கெட்டுப்போகின்றதேயென நொந்து இழந்த தூய்மையினை மீளவும் பெறவும் மேலும் தூய்மைகெடாமல் இருக்கவும் உளமார முயன்றுவரும் என்போன்றார்க்குத் தாங்கள் ஒரு வழிகாட்டும் வயங்கொளியாகத் திகழுகின்றீர்கள்.

திரு. கீ. இராமலிங்கம், எம்.ஏ.
பசுமலை.

சைவமும் தமிழும் தழைக்கச் செந்தமிழ் நூல்கள் பலவற்றை ஆங்கில நூல்களைப் போல அறிஞருள்ளத்தைக் கவரும் வண்ணம் அழகிய முறையில் வெளியிட்ட பெருமை அன்பர் சுப்பையா பிள்ளை அவர்கட்கு உண்டு. நமது பிள்ளை அவர்கள் மணிவிழா இனிது நிறைவேறச் சொக்கர் திருவருள் புரிவாராக.

ஸ்ரீ-ல. ஸ்ரீ. சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்.
தருமபுர ஆதீனம்.

பிள்ளையவர்கள் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் மூலம் செய்த தொண்டு மிகச் சிறந்த தொன்றாகும். பிள்ளையவர்களென்றாலே கழகமென்றும் கழகமென்றாலே பிள்ளையென்றும் சொல்லக்கூடிய அளவில் ஒன்றிய தன்மை யுலகமறிந்தது.

திரு. சுப. இராமநாதன், எம்.ஏ.
அண்ணாமலைநகர்.

திரு. வ. சு. அவர்கள் சைவசித்தாந்தக் கழகத்தின் உயிர். வெளிப் போந்த நூற்கள் பலவும் அவரதுடல். உயிரின் முயற்றியால்,

எண்ணில்பலநூல் உரையெய்தின
கண்ணில்பலநூல் கவின்பெற்றன
புத்தம்புதிய நூற்பல வெளிப் போந்தன
இத்துடன் நில்லாது இனிவரப் போவனபல.

அவர் பல்லாண்டு வாழ்ந்து தமிழ்த்தாய் பெருமிதங் கொள்ளப் பணி புரிவார்களாக என வாழ்த்துகின்றேன்.

திரு. ந. மு. கோவிந்தராய நாட்டார்.
தஞ்சை.

தமிழ்த் தாய்க்கும் சிவன் என்னும் செம்பொருளுக்கும் சிறந்த பணி செய்யும் தங்களுக்குப் பரமேஸ்வரனை நடராஜப் பெருமான் எல்லா வளங்களும் நீண்ட ஆயுளும் நல்கியருளுமாறு வழுத்துகின்றேன்.

திரு. ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை.
அண்ணாமலைநகர்.

ஆர்கலியாம் அருந்தமிழை அன்புடனே வளர்த்திட்டுச்
சீர்மிக்க பலநூல்கள் செம்மையொடு பதிப்பித்துச்
சோர்வின்றி செயலாற்றுஞ் சுப்பையா இன்பமொடு
பார்புகழப் பண்புமிகு மங்கையரின் அரசியொடு
நீர்சூழ்ந்த நிலவுலகில் நெடுங்காலம் வாழ்தற்குப்
பார்த்தனவன் பணிந்திட்ட பரமனருள் பொழியுமே!

திரு. சி. காந்திமதிநாதன்.
சாத்தூர்.

நீண்டகாலமாகப் பயனுள்ள பல உயர்ந்த தமிழ் நூல்களை வெளியிட்டுவரும் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் தலைவர் திரு. வ. சுப்பையாபிள்ளை யவர்களின் மணிவிழா சமீபத்தில் நடைபெற்றது.

இத்தமிழ்ப்பெரியார் ஒவ்வொருவரையும் தமிழகம் நன்கு போற்றித் தனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டது. சங்கச்சார்பிலே நாமும் நமது நன்றிகலந்த வாழ்த்தையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

**'பாரதி,' செப்டம்பர் இதழ்.**

## நன்றி

தேவாரத் திருமுறையோதித் திருமாகறல் அடைக்கலங்காத்த நாதர் திருவருளால் தீராநோய் தீரப்பெற்றுச் சிவமாய்த் திகழும் சேலம் சிவத்திரு கி. சுப்பராயபிள்ளை யவர்கள் திருமுறைப் பெருமைக்கோர் எடுத்துக்காட்டாக நம்மிடையே இஞ்ஞான்று விளங்குகின்றார்கள்.

அப்பெரியார் தற்பொழுது திருப்பனங்காட்டூரில் விருப்புடன் வதிந்து வருகின்றார்கள். அவர்கள் நம் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையாபிள்ளை யவர்கள்பால் நீங்காப் பேரன்புடையவர்கள். திரு. வ. சு. அவர்களின் மணிவிழாவைப் பாராட்டி என்றும் தான் பூசித்து வரும் வழிபடுகடவுட்கும், திருப்பனங்காட்டூர்த் திருக்கோவிற் கடவுளர்க்கும் சிறப்பு வழிபாடுகள் செய்தும் செய்வித்தும் திருநீறு குங்குமம் முதலிய தெய்வ அருட்பொருள்கள் நல்வாழ்த்துடன் விடுத்துள்ளார்கள்.

அப்பெரியார் பொன்னடியினை நன்றியுடனும் வணக்கத்துடனும் போற்றுகின்றாம். மேலும் அடியேன் வேண்டுகோளின்படி கழக ஆட்சியாளர் திரு. வ. சு. அவர்களின் மணிவிழாவினைப் பாராட்டி நேரிலும் கடிதவாயிலாகவும் வாழ்த்துச் செய்திகள் விடுத்துள்ள அன்பறிவுசான்ற பெரியோரனைவர்கட்கும் இதன்வாயிலாக அடியேன் நன்றிபாராட்டுதலை மிகவும் பணிவுடன் தெரிவித்துக்கொள்கின்றேன்.

அன்பும் பணிவுமுள்ள,

**ப. இராமநாதன்.**

# நெடுநல்வாடை திணையாராய்ச்சி மறுப்புக்கு விடை

[வித்துவான் செ. வேங்கடராமச் செட்டியார்]

செந்தமிழ்ச் செல்வி சிலம்பு ௩௪, பரல் ௬, ௭ ஆகிய இதழ்களில் வெளிவந்துள்ள நெடுநல்வாடை திணையாராய்ச்சி மறுப்புக்கு விடையாக எழுதப்படுகிறது.

திருவாளர் பண்டித வித்துவான், சங்குப் புலவர் எழுதிய மறுப்பு, நிரம்பிய தகுதியுடையதாகவே இருக்கும் என்று எண்ணிப் படித்துப் பார்த்தேன். ஏமாற்றமே எய்தினேன். ஒருவர் ஆராய்ந்துகூறிய கருத்தை மறுக்கவேண்டுமாயின் அக் கருத்திற்கு அடிப்படையான காரணம் யாதெனத் தெளிந்து அது தவறுடைத்தாயின் அதனை மறுத்துத் தம் கருத்தை நிறுவுதல் வேண்டும். "நெடுநல்வாடை முல்லைத் திணைப்பாடல் ஆகும்" என்று யான்கூற அடிப்படைக் காரணங்கள் இவை என எடுத்துக் காட்டியவற்றை மறுக்காமல் விடுத்துத் துணைக் காரணங்களாகக் காட்டிய சிலவற்றிற்கு மறுப்பு என்ற பெயரால் சிலவற்றை எழுதியிருக்கக் கண்டேன்.

மறுப்பு எழுதிய அப் புலவர்க்கே தம் முடிவு தகுதியானது என்ற நம்பிக்கையில்லை என்பதை அவர் எழுதியுள்ள, "என்னை யான் அறியாது மயங்கிக் கூறினும் அறிஞர் தெளிவிப்பர் என்பது தெளிவு" என்றபகுதி விளக்கிவிடுகின்றது. மேலும், நூற்பொருள்பற்றி வாதிக்கத் தொடங்குகின்றவர்கள் எழுத வேண்டிய முறையை மறந்து எழுதப்பட்டுள்ளது.

"உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர்" என்றும், "நச்சினார்க்கினியன் எச்சில் நறுந்தமிழ் நுகர்வர் நலலோர்" என்றும் புலவரால் பாராட்டப் பெற்ற உரையாசிரியரை ஏதோ மயக்கத்தான் கூறினர் என மயங்காது கூறிய நண்பர் திரு. செ. வே. அவர்கள் மற்றைப் புலவர்கள் எவரையும் மயங்கினர் என்று கூறத் தியங்குவாரா? தயங்குவாரா? தயங்கார் என்பது துணிவு" என்று முன்னுரையில் எழுதியுள்ளார்.

விடை: நச்சினார்க்கினியர், உயர்ந்த உரையாசிரியர் என்று மதிப்பதில், திரு. சங்குப்புலவரில் குறைந்தவன் அல்லேன். அத்தகைய மதிப்பு அவர்க்குக் கொடுத்தாலும் கருத்துமாறுபாடு உள்ள இடத்தை எடுத்துக் காட்டல் கடன் அன்றோ?

"அரியகற்று ஆசற்றார்கண்ணும் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு."

எனத் தெய்வப் புலமைத் திருவள்ளுவரும்,

"குணங்கள் மூன்றும் மாறிமாறி வருதல் யாவர்க்கும் உண்மையின் உயர்ந்த பொருள் இழிந்தோர் வாயினும் இழிந்த பொருள் உயர்ந்தோர் வாயினும் உறுதிப் பொருள் பகைவர் வாயினும் கெடுபொருள் நட்டார் வாயினும் ஒரோவழிக் கேட்கப் படுதலால் எப் பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் என்றார்" என்று உரையாசிரியர்க்கு வரம்பு எனத் திகழும் பரிமேலழகரும் கூறிய கருத்துக்களை உளங்கொண்டு நோக்கும் பொழுது, 'இவர் பேரறிஞர் ஆதலின் இவர் எழுதியன யாவும் அப்படியே யேற்றுக்கொள்ள வேண்டும்' என்று எவரும் கூறார் என்பது தெளிவு.

பண்டுதொட்டுப் புலத்துறை முற்றிய நலத்தகையாளர் பலரும், இந் நெறியான் நோக்கி ஒருவர் கூறிய கருத்தைப் பின் வந்தவர் மறுத்துக் கூறும் இயல்பைத் தொல்காப்பிய முதலிய நூலுரைகளில் காணலாம். ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பிய முழுமைக்கும் உரைவரைந்த உரையாசிரியர் உரையைப் பின்வந்த சேனாவரையர் சொல்லதிகாரத்தில் "போலியுரை" என்றும் 'அவர்க்கது கருத்தன்று' என்றும் எத்துணையிடங்களில் எழுதியுள்ளார் ?

தமிழ் மொழிப் புலமையும் வடமொழிப் புலமையும் நிறைவுறப் பெற்று,இலக்கியப் புலவராய்க்-காப்பியப் புலவராய்த்-தருக்க நூற் புலவராய்-உரையாசிரியராய்ச்-சித்தாந்த ஞாயிறாய் விளங்கிய சிவஞான முனிவரால் "வடநூற் கடலும், தமிழ்நூற் கடலும், நிலைகண்டுணர்ந்த சேனாவரையர்" எனப் புகழப் பெற்ற சேனாவரையர் உரையை நச்சினார்க்கினியர், சொல்லதிகாரத்தில் மறுத்துத் தம் கருத்தை நிறுவவில்லையா ? துணைவஞ்சி எனப் புறநானூற்றுக்குத் துறைவகுத்தோர், "வள்ளியோர்ப் படர்ந்து" எனத் தொடங்கும் பாடற்குத் துறைகூறியிருக்க, அதை மறுத்து நச்சினார்க்கினியர், 'துணைவஞ்சி' என்பார்க்கு அதுமேற் செலவின்கண் அடங்காமையிற் பாடாண்டிணை யெனப்படும் என்றுரைக்க எனத் தன் கருத்துரைக்க வில்லையா ? அவ்வுச்சி மேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் கருத்தைப் பின்வந்த சிவஞான முனிவர் மறுத்துக் கூறவில்லையா ? அவரும் நச்சினார்க்கினியரின் எச்சில் நறுந்தமிழை நுகர்ந்தவர் தாமே !

இவர்கள் எல்லாம், முன்னுள்ளோர் கருத்தை மறுத்தல் ஆகாது என்று கொண்டு அமைந்திருந்தால் தொல்காப்பியத்

திற்குப் பல வுரைகள் தோன்ற வியலுமா? தெய்வத் திருக்குற ளுக்குத்தான் தருமர் முதலிய பதின்மர் உரை எழுதவேண்டி வருமா? அறிவூற்று வற்றிப் போயன்றே இருக்கும்?

நச்சினார்க் கினியர் உரையின்றேல் தொல்காப்பியம் பத்துப் பாட்டு முதலிய இலக்கண இலக்கியங்கள் இத்துணை விளக்கம் பெறல் அரிது எனினும் அந் நச்சினார்க்கினியர் சிலவிடங்களில் பொருந்தாவுரை கூறுவதும் உண்டு என்பதைப் புலவர் உலகம் நன்கறியும்.

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை."

என்று தொடங்கும் கற்பியல் சூத்திரத்திற்கு இளம்பூரணர், இல்லறத்தோர் இயல்பு கூறியதாகக் கருத்து வரைந்திருக்கவும், நச்சினார்க் கினியர் "இது, முன்னர் இல்லறம் நிகழ்த்திய தலைவ னும் தலைவியும் பின்னர்த் துறவறம் நிகழ்த்தி வீடுபெறுப என் கின்றது" என்று பொருந்தாவுரை கூறியுள்ளார் என்பதை யான் எழுதிய "வாழ்வின் கடைக்கோட் காலம்" (சிலம்பு. உஅ, பால்-கஉ.) என்ற கட்டுரையில் கண்டு கொள்க. உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க் கினியரும் முக்குணவயத்தான் முறை மறந்து அறைதலுண்டு என்பது அவ்வொரு சூத்திரவுரை யானே விளங்கும். எனவே நெடுநல்வாடைக்குத் திணை 'வாகை' என்று நச்சினார்க்கினியர் கூறியது மயங்கிக்கூறியது ஆகும் என்று யான் கூறினால் அஃது என் மயக்கமா? யாண்டும் நச்சி னார்க் கினியர் மயங்கி மாறுபட உரைத்ததே இல்லையென நிறுவ வல்லரோ மறுப்பாசிரியர்?

மறுப்பு: நக்கீரனார் நெடுநல்வாடை பாடிய காலமுதல் இது காறும் வாழ்ந்து வந்த புலவர் பலரும் இதனை ஆய்ந்து திணை, துறை தெரியாது ஆராய்ச்சிக் குரியது என விடுத்தனரா? திணையும் துறையும் கூறாது திகைத்தனரா? பத்துப் பாட்டுக்கு உரை கண்ட நச்சினார்க்கினியர் அவற்றுள் ஒன்பதுக்கும் திணை துறைகூறி இஃது ஒன்று மட்டும் ஆராய்தற் பாலது என விடுத் தனரா? திகைத்தேன் என்று கூறினரா? "திகைக்கச் செய்தேன் நச்சினார்க்கினியரை" என அப்பாடல் கூறியதா? இங்ஙனம் தாமே கூறியது மயக்கமன்றோ? என்பது அவர் மறுப்பு.

விடை: நெடுநல்வாடைக்கு நச்சினார்க்கினியர் உரையெழு துவதன் முன்னர் இருந்த புலவர் எத்திணை எத்துறை கொண் டனர் அப் பாடற்கு என்பது யாரும் கூறவியலாதாகவும் நக் கீரனார் நெடுநல்வாடை பாடிய காலமுதல் இதுகாறும் வாழ்ந்து வந்த புலவர் அப் பாடற்குத் திணை துறை தெரியாது ஆராய்ச்சிக்

குரியது என விடுத்தனரா? அவற்றைக் கூறாது திகைத்தனரா ? என்ற வினாவை எழுப்புதல் எங்ஙனம் பொருந்தும் ?

ஒருநூல் எழுதப்பட்ட காலமுதற்கொண்டு பிறர் அம் முயற்சியில் தலைப்படாமையால் காணாதிருந்த ஒரு கருத்தைப் பன்னெடுங் காலத்துக்குப் பின்வந்தோர் அம் முயற்சியில் தலைப் பட்டு அறிந்து கூறியது பொருத்த முடையதேயாயினும் இது காறும் ஒருவரும் கூறாத கருத்து என்பதால் அது தவ றுடைத்து என்பது மறுப்பா சிரியர் கருத்துப் போலும் ! இம் முறையால் நோக்கின் பல்கலைக்கழகங்களில் ஆராய்ச்சிக் கழகமே வேண்டுவதில்லையே ! ஆராய்ச்சியாளர்கள் முன் யாருங் காணாத அரிய கருத்துக்களை யன்றோ முயன்று காணவேண்டி யுளது ? திருக்கோவையார்க்கு உள்ள உரையை நச்சினார்க் கினியர் உரையென்றும் சேனாவரையர் உரையென்றும் முன் னுள்ளோர் மயங்கி நினைத்துப் பதிப்புச் செய்திருந்ததனை மறுத் துப் பின்வந்த ஆராய்ச்சியாளர், பேராசிரியர் உரைதான் என்று காரணங்காட்டி நிறுவவில்லையா ? அதனைப் புலவருலகம் போற்றி யேற்றுக் கொள்ள வில்லையா ? மாலைக் காலத்து மயங்கிருளில் ஒருவர் பழுதையைப் பாம்பு என்று எண்ணிப் பாம்பு பாம்பு என்று அலறினாராக உடன்வந்த மற்றொருவர், அவ்வடிவத்தின் தோற்றம் அசைவின்மை முதலியவற்றை யூன்றி நோக்கி 'இது பாம்பன்று; பழுதையே; பாம்பென்று மயங்கித் திகைத்தீர்' என்று கூறினால் மூன்றாமவர் ஒருவர் வந்து, "அவரென்ன பழுதையைப் பாம்பு என்று திகைத்தேன் என்று கூறினரா ? அல்லது அப்பழுதைதான் யான் அவரைப் பாம்பு என்று திகைக்குமாறு செய்தேன் என்று கூறிற்றா ? அவ்விரண்டும் இல்லாதபோது நீர் எவ்வாறு அவர் பழுதையைப் பாம்பு என்று திகைத்ததாகக் கூறலாம் ? அங்ஙனம் கூறிய நீரே மயங்கித் திகைத்தீர்" என்று கூறினாராயின் அவர்கூற்று எவ்வளவு பொருத்தமோ அவ்வளவு பொருத்தம் மறுப்பாசிரியரின் மேலை வினாவில் உள்ளது.

"முன்னுரையில் வாகைத்திணை யென்றும் கூதிர்ப்பாசறைத் துறை என்றும் கூறிய நச்சினார்க்கினியர், பின்னுரையில் வஞ்சி கொற்றவை நிலை, பாலை எனத் துணிவின்றிக் கூறியுள்ளார்" என்று யான் எழுதியதைப் பிறழ உணர்ந்து எழுதியதாகக் கூறிய மறுப்பா சிரியர், 'தெளிப்பு' என்ற தலைப்பில் தெளிவி லாதவற்றை வரைந்துள்ளார். அவர் கூறும் தெளிப்பு:

நச்சினார்க்கினியர், முன்னுரையில் கூறியதே திணையும் துறையும் ஆம்; என்பதும், பின்னுரையில் பாடலை முடித்துக்

காட்டுதற்காகவே வஞ்சி, பாலை, கொற்றவைநிலை என்பனவற்றைக் கூறியுள்ளார் என்பதும் ஆம். இதை அவர் விளக்கும்போது "பாண்டியன் மண்ணசை இச் சென்றான் ஆதலால் வஞ்சியாம். வஞ்சியில் கொற்றவையைப் பரவுவது வழக்கமாம். கொற்றவை பாலைநிலத்தெய்வமாம்; பாலைக்கும் வஞ்சிக்கும் தொடர்புண்டு ஆதலால் நான் கொற்றவையைப் பரவுவாள் ஒருத்தி கொற்றவையை நோக்கிக் கூறியதாக வினைமுடிவு செய்தேன்" எனக் குறிப்பால் விளக்கினர். ஆங்குத் திணையும் துறையும் கூறினரல்லர். திணை துறை ஓரிடத்தில் கூறுவாரேயன்றிப் பல விடங்களிலும் கூறுவாரா உரையாசிரியர்?' என்கின்றார்.

விடை : இவ்விறுதி வினவும் மறுப்பாசிரியரின் நம்பிக்கையால் எழுந்ததே யன்றி ஆராய்ச்சியின் தெளிவினாலன்று என்பது நன்கு புலப்படுகின்றது. ஒரு பாட்டின் முடிபு கூறுதற்காகத் திணையும் துறையும் வேறு கூறினார் என்றல் பொருந்துமா? ஒரு பாடலின் திணையும் துறையும் வேறாகவும் அப்பாடலின் முடிபுக்காகக் கூறும் திணையும் துறையும் வேறாகவும் இருக்கலாம் என்பது புதுவகையான ஆராய்ச்சியாக வன்றோ வுளது? அவர் கூற்றின்படி முடிவுகூற வேண்டிக் கூறிய வஞ்சித் திணையின் தன்மையும் கொற்றவைநிலைத்தன்மையும் அப்பாடலில் இருந்தமையால் தானே அத்திணை துறை கூறியிருப்பார்? இவையேதும் இன்றி முடிவுகூறவேண்டி அத்திணை துறைகளைக் கூறியிருப்பாரா? "வஞ்சியில் கொற்றவையைப் பரவுவது வழக்கமாம்" என்கின்றாரே மறுப்பாசிரியர்? சான்று கூறவேண்டாமா? தொல்காப்பியர், கொற்றவைநிலையை வஞ்சித் திணைக்கு உரியதாகக் கூறியுள்ளாரா? புறத்திணையியல் எட்டாம் சூத்திரவுரையில் :

"இத்திணைக்குப் பலபொருள் ஒருங்குவந்து ஒருதுறைப் படுதலும் கொள்க. அவை கொற்றவை நிலையும், குடைநாட் கோளும், வாணாட்கோளும், படையெழுச்சி கண்டோர் கூறுவனவும், பகைப்புலத்தோர் இகழ்வும் இவைபோல்வன பிறவும் இயங்குபடை யரவமாய் அடங்கும்" என நச்சினார்க்கினியர் கூறிக்கொண்டதுதானே சான்றாகக் காட்டலாம். பன்னிரு படலம், புறப்பொருள் வெண்பாமாலை போன்ற நூல்களிற் கண்ட துறைகள் தொல்காப்பியத்திலும் இருப்பதாகக் காட்டவேண்டி எழுதியதுதானே! வெண்பாமாலையில் வஞ்சித்திணையில் கூறியுள்ள கொற்றவைநிலையும் நெடுநல்வாடையில் இருப்பதாக அவர் கூறும் கொற்றவை நிலையும் ஒத்ததன்மையுடையனவா? இளம்பூரணர், அச்சூத்திரவுரையில் அவ்வாறு கூறவில்லையே!

'பாலைக்கும் வஞ்சிக்கும் தொடர்புண்டு' என நச்சினார்க்கினியர் குறிப்பால் தமக்கு விளக்கினதாக மறுப்பாசிரியர் கூறிப் பொருள்காணமாட்டாத தம் தவற்றினை அவர்மேல் ஏற்றிக் கூறியிருக்கின்றார். பாலைக்கும் வஞ்சிக்கும் எவ்வகையில் தொடர்பு உண்டு என்பதை விளக்கினாரில்லை. வஞ்சித்திணையும் கொற்றவை நிலையும் கூறவந்தவிடத்துப் பாலைத்திணையைக் கூறுதற்கு இயைபென்னை என்பதையும் விளக்கவில்லை.

"இப்பாட்டுத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மண்ணசையால் சென்று பொருதலின் இப்போர் வஞ்சியாகலின், வஞ்சிக்குக் கொற்றவைநிலை யுண்மையின் கொற்றவையை வெற்றிப்பொருட்டுப் பரவுதல் கூறினார்; அது பாலைத்திணைக் கேற்றலின்" என்பதே நச்சினார்க்கினியர் கூற்று.

இத்தொடரில், "அது பாலைத்திணைக்கேற்றலின்" என்புழி, 'அது' என்று நச்சினார்க்கினியர் சுட்டியது 'கொற்றவையை வெற்றிப்பொருட்டுப் பரவுதல் என்பதையேயாம்' என்பது யாரும் எளிதின் உணரக்கூடியதாக விருப்பவும், மறுப்பாசிரியர், அது என்பது வஞ்சியைச் சுட்டியதாகப் பொருள் கொண்டு, 'பாலைக்கும் வஞ்சிக்கும் தொடர்புண்டு ஆதலால்' என விளக்கங் கூறியுள்ளார். எவ்வகையில் தொடர்புண்டு என்பதை விளக்கவில்லை கொற்றவையைப் பரவுதல் பாலைத்திணைக்கு ஏற்றலின் என்பதே நச்சினார்க்கினியர் கருத்தாகும். பாலைக்குத் தெய்வம் கொற்றவை என்ற கருத்தால் இங்ஙனம் கூறியுள்ளார். பாலைத்திணையை இங்கு எடுத்துக்கூற இயைபென்னை?

"வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகம்" என்புழிக் குறிப்பால் பாண்டியன் பாட்டுடைத்தலைவன் என்பது பெறப்படவில்லையாயின், இந்நெடுநல்வாடை பாலைத்திணையாகும் என்னுங் கருத்தினர் நச்சினார்க்கினியர். அக்கருத்துப் புலப்படவே "அது பாலைத்திணைக்கேற்றலின்" என்றார். இவற்றையெல்லாம் நோக்கும்போது நச்சினார்க்கினியர் இந் நெடுநல்வாடையை வேறு வேறு திணை துறைகட்கு உரியதாகக் கருதினர் என்பது பெறப்படுகின்றதன்றோ?

"அது பாலைத்திணைக்கேற்றலின்" என்றது பாலைத்திணைக்குத் தெய்வம் கொற்றவை என்ற கருத்தாற் கூறினார் போலும்; அவ்வாறு கருதியிருப்பின் அஃதும் அவர் கருத்திற்கு முரணேயாகும்" என்று யான் எழுதியுள்ளேன். அவ்வாறு எழுதக் காரணம் கீழ்வருவன:

"மாயோன் மேய காடுறை யுலகமும்" (அகத்திணை, ரு)

என்ற சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர், இனிப் பாலைக்கு,

"சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ"　　(கலி. கசு)

எனவும்,

"வளிதரு செல்வனை வாழ்த்தவும் இயைவதோ"

எனவும், ஞாயிற்றைத் தெய்வமாக்கி அவனிற்றோன்றிய மழையினையும் காற்றினையும் அத் தெய்வப்பகுதியாக்கிக் கூறுபவாலெனின், எல்லாத் தெய்வத்திற்கும் அந்தணர் அவிகொடுக்குங்கால் அங்கி ஆதித்தன்கண் கொடுக்கும் என்பது வேதமுடிபு ஆகலின், ஆதித்தன் அவ்வெல்லா நிலத்திற்கும் பொதுவென மறுக்க. இவ்வாசிரியர் கருப்பொருளாகிய தெய்வத்தினை முதற்பொருளோடு கூட்டிக் கூறியது தெய்வ வழிபாட்டு மரபு இதுவே, ஒழிந்தது மரபன்று என்றற்கு. எனவே அவ்வந் நிலத்தின் தெய்வங்களே பாலைநிலத்திற்கும் தெய்வமாயிற்று," என ஆய்ந்து கூறிப் பாலைக்கு என்று தனியே நிலம் இல்லாதவாறுபோலத் தெய்வமும் இல்லையென்பதையும், எந்த நிலம் பாலையாக மாறிற்றோ அந்த நிலத்தின் தெய்வமே அப்பாலைக்குத் தெய்வமாம் என்பதையும் நன்கு விளக்கியுள்ளார். இரண்டாவதாக அக் கருத்தையே வலியுறுத்தவேண்டி, "கருப்பொருளாகிய தெய்வத்தை முதற்பொருளோடு கூறியது, அவை வந்த நிலத்தின் பயத்தவாய் மயங்குமாறுபோல மயங்காது இதுவே யென்றற்கும், கருப்பொருளுடைத்து எனப்பட்ட பாலைக்குத் தெய்வத்தை விலக்குதற்கும் என்று உணர்க" எனவும் வரைந்துள்ளார்.

மறுப்பாசிரியர் இந்த இரண்டாம் பகுதியை மட்டும் எடுத்துக்காட்டி, "இதனால் தொல்காப்பியர் கருத்துப் பாலைக்குத் தெய்வம் இன்று என்பது விளங்கும். அதுவன்றி நக்கீரர் காலத்தில் பாலைக்குத் தெய்வமில்லை என்பது விளங்குமா? நக்கீரர் தாம் பாடிய நெடுநல்வாடையில் பாலைக்குத் தெய்வமாகிய கொற்றவையைக் குறித்திரார் என்பது விளங்குமா?" எனத் தமக்கேயுரிய பாணியில் கேள்விகள் பல கேட்கின்றார். முடிவில், "ஆண்டுத் தொல்காப்பியர் கருத்தை வரைந்தார்; ஈண்டுத் தம் கருத்தை வரைந்தார். இஃது எங்ஙனம் ஒன்றற்கொன்று முரணும்? முரணுமாறு இல்லையெனத் தெளிக" என்று தெளிவிக்கின்றார். இத்தெளிவைப் புலவர் உலகமே கண்டு தெளிய வேண்டும்.

மேலே காட்டிய நச்சினார்க்கினியர் உரைப்பகுதி இரண்டையும் நோக்கினால் அவர் கருத்துப் பாலைக்குத் தெய்வம் இன்று என்பதே தெளிவாதல் காணலாம். அக்கருத்து அவர்க்கின்றேல் பாலைக்கு ஞாயிறு தெய்வம் என்பாரைக் காரணங்காட்டி மறுப்ப

தும், "அவ்வந் நிலத்தின் தெய்வங்களே பாலைநிலத்திற்குத் தெய்வமாயிற்று" எனத் தந் துணிபுரைத்தலும் கூடாவாம் என்க. மேலும், பாலைக்குத் தெய்வம் கொற்றவையென்பது நச்சினார்க்கினியர் கருத்தாயின் இவ்வைந்தாம் சூத்திரத்தில் (அகத்திணை. ரு) குறிப்பாகவேனும் அதனைப் பெறவைத்திருப்பா ரன்றோ? அவர் பாலைக்குத் தனியே தெய்வம் இல்லை என்ற கருத்தை இரண்டிடங்களில் வற்புறுத்தியிருப்பவும் மறுப்பாசிரியர் இங்ஙனம் முரணுமாறு கூறி, "முரணுமாறு இல்லையெனத் தெளிக" என்று தாம் தெளிப்பதாகத் தெரிவிக்கின்றார்.

"நச்சினார்க்கினியர், பாலைக்குத் தெய்வம் கொற்றவை என்ற கருத்தினராயின் அஃதும் அவர் கருத்திற்கு முரணனதே" என்பதை வரைந்தேனேயொழிய, 'நக்கீரர் கொற்றவையை யுடன்படுவரா?' என்பதுபற்றி வரையவில்லை. பிற்காலத்தோர் கொற்றவையைப் பாலைநிலத் தெய்வமாகக் கொள்ளவில்லை என்றும் யான் கூறவில்லை. நக்கீரனார், தம் முருகாற்றுப்படையில் "கொற்றவை சிறுவ" என முருகனை விளித்துள்ளமையால், 'கொற்றவையை யுடன்பட்டார்' என்பது போதருமேயன்றிப் 'பாலைக்குத் தெய்வம் கொற்றவை' என்பது பெறப்படுமா? "பாலைக்குத் தெய்வம் கொற்றவை என்னும் கருத்தினராயின், நச்சினார்க்கினியர் தாம் அகத்திணையியலில் வரைந்த கருத்திற்கு முரணனதைக் கூறினார் ஆவர்" என்று யான் காட்டிய குற்றத்தை, நக்கீரர் கொற்றவையை யுடன்பட்டவர் என்பதை நிறுவியதாலோ, "நச்சினார்க்கினியர், பிற்காலத்தார் பாலைக்குத் தெய்வமாகக் கொற்றவையைப் பரவும் வழக்கம் உண்மையும் அறிந்தார்" என்று கூறியதாலோ போக்கிவிட முடியாது. நச்சினார்க்கினியர் பிற்காலத்துக் கொற்றவையைப் பரவும் வழக்கம் உண்மையை யறிந்து கூறினர் என்பதற்குச் சான்று வேண்டும். 'பாலைக்குத் தெய்வமின்று' என்பதும் "அவ்வந் நிலத்தின் தெய்வங்களே பாலைநிலத்திற்குத் தெய்வமாயிற்று" என்பதும் நச்சினார்க்கினியர் கருத்தாதலும், நெடுநல்வாடை யுரையில் கொற்றவை வழிபாடு பாலைத்திணைக்கு உண்டு என்னுங் கருத்தினராயின் முன்னைய அவர் கருத்திற்கு முரணுகும் என்பதே யுறுதியாதலும், மறுப்பாசிரியர் கூறியன யாவும் உண்மையொடு படாதனவாதலும் காண்க.

> "மக்கள் நுதலிய அகனைந் திணையும்
> சுட்டி யொருவர் பெயர்கொளப் பெறாஅர்." (அகத். ருச)

என்ற சூத்திரத்தும், அதற்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள உரையகத்தும் அகன்ஐந்திணையில் தலைமக்கள் இயற்பெயர் கூறலாகாது என்பது பெறப்படுகின்றதேயன்றிக் குடிப்பெயரோ

சாதிப்பெயரோ கூறலாகாது என்பதும் தாரும் ஆரும் கூற லாகாதென்பதும் குறிப்பினாலும் குடிப்பெயர் கூறலாகது என் பதும் பெறப்படவில்லை என்பது தெளிவு" என யான் எழுதிய தற்கு மறுப்பாசிரியர் பல விளக்கங்கள் தந்துள்ளார். முடிவாக,

மறுப்பு: "புறத்திணை மருங்கின்" (அகத். ருரு) என்ற அகத்திணையியல் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர், ஒருவனையும் ஒருத்தியையும் விதந்துகூறும் இயற்பெயர் அகத்திணைக்கண்ணே வந்து பொருந்துமாயின் ஆண்டும் புறத்திணை கலந்தவிடத் தல்லது வருதல் இல்லை" என்றவாறு எனப் பொழிப்பு வரைந் திருப்பதால் கிளவித்தலைவன் இன்னான் எனத் தோன்றும்படி குறிப்புமொழி யிருப்பினும் அப்பாட்டு அகமாகாது என்பதே. "சுட்டியொருவர் பெயர்கொளப் பெறாஅர்" என்ற தொல்காப் பியர் கருத்தும் அதுவோ என்கின்றார்.

விடை: கிளவித்தலைவன் இன்னான் எனத் தோன்றும்படி குறிப்புமொழி யிருப்பினும் அகமாகாது என்பதே நச்சினார்க் கினியர் கருத்து என்பதற்கும், தொல்காப்பியர் கருத்தும் அதுவே என்பதற்கும் மறுப்பாசிரியர் காட்டிய ஏதுவின் வலி மையைப் புலவர் உலகம் பொருந்த நோக்குவதாக. "திங்கள் கரிது அது வெண்மையாக இருத்தலால்" என்று ஒருவர் ஏதுக் காட்டி நிறுவினால் எவ்வளவு பொருத்தமோ அவ்வளவு பொருத் தம் உண்டு அவர் ஏதுவினும் மேற்கொளினும். இங்ஙனம் பொருந்தா ஏதுக்காட்டி நிறுவுவதினும் "யான் இவ்வாறு கருது கின்றேன்" என்று கூறினாலும் பொருத்தமுண்டு. "வேம்பு என்ற குறிப்பினால் பாண்டியன் என்று தோன்றுதலால் இப் பாடல் அகமாகாது" என்ற நச்சினார்க்கினியரே அகத்திணை யியலில், "குறிப்புமொழி யிருப்பினும் அகமாகாது" என்று எழுதிவைத்துக் கொள்ளவில்லையே!

பொக்கமில் புலவராம் நக்கீரனார், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுடைய வீரச் சிறப்பை அகத் திணைப் பாடலில் வைத்து விளக்கவேண்டும் என்ற கருத்தால் இந்நெடுநல்வாடையை யியற்றியுள்ளார் என்பதைப் பலகாரணங் காட்டி யான் விளக்கியுள்ள பகுதிக்கு மறுப்புக்கூற வியலாமை யால் விடுக்கின்றவர், "இவ்வாராச்சியாளர், 'பொக்கமில் புலவ ராம் நக்கீரனார்' என்று அவர்க்குப் பெருமை கூறி அவர் பக்க மிருந்து பார்த்தவர்போல அவர் கருத்துக்களை நுணுகியாராய்ந்து ஒவ்வொன்றாக எடுத்துக்காட்டினர். அக்கருத்துக்களை அறிஞர் அவரது திணையாராய்ச்சிக்கட்டுரையில் கண்டு கொள்க" என்று எள்ளல் தோன்றக் கூறியுள்ளார்.　　(தொடரும்)

---

# நடிப்பவர்க்கே நல்லகாலம்

[சிவநெறிப்புலவர், ஆ. சிவலிங்கனர், மயிலம்]

"உண்மையாக நடப்பவர்களுக்குக் காலம் இல்லை; நடிப்பவர்களுக்குத்தானையா நல்லகாலம்" என்று அங்கலாய்த்துக் கொள்பவர்களை நாம் காணுகின்றோம். அவ்வாறு அங்கலாய்த்துக் கொள்பவர்களுள், உண்மையிலேயே தாங்கள் நல்லவர்களாக இருந்து அல்லாதவர்களுக்குக் கிடைக்கும் பெருமை முதலிய கண்டு கூறுபவர்களும் உண்டு. நல்லவர்கள் இருக்கும் இடம் தெரியாதபடி மங்கிக்கிடக்க, அல்லாதவர்கள் புகழ்பெற்று விளங்குதலைக் கண்டு கூறுபவர்களும் உண்டு. ஒருவன் இறைவனிடம் அன்பில்லாதவன்; ஆனால் அன்புடையவன்போல நடப்பான், பேசுவான். வீட்டில் திருநீறிடாதவன்; ஆனால் வெளியில் பலர் காண இட்டுவருவான். உள்ளத்தில் தீய எண்ணங்கள் உடையவன்-மறைவாகத் தீய செயல்களும் செய்பவன்; ஆனால் பேச்செல்லாம் நல்லனவாக-செயலெல்லாம் காண்பார்க்கு நல்லன போலத்தோன்ற இருப்பான். இப்படிப்பட்டவனைப் பார்த்துத் தான் முன்கூறியவாறு அங்கலாய்ப்புத் தோன்றுகிறது. இத்தகையவனைப் போன்ருரை மனதில் வைத்துத்தான் மாணிக்கவாசகப் பெருமான்,

"நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து நான்நடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்."

என்று தம்மையே கூறிக்கொள்பவர்போல் கூறினர்.

"நாடகத்தில் ஆடியவர் வேடந்தாங்கி நடிப்பவர் உண்மையடியவர்போல் நடிப்பர். அதுபோல் யான் நடித்து முத்தி வீட்டைப்புக மிகவும் அவசரப் படுகின்றேன்."
என்றார் மணிவாசகர்.

புகைவண்டியில் கட்டணத்தாள் (Ticket) இன்றிப்போகும் ஒருவன், தான் இறங்கிச் செல்ல நினைத்த நிலையம் வந்தவுடன், தப்பிப்போக வேறு யாதோர் வழியும் இல்லாமல் உரிய வாயில் வழியேதான் போகவேண்டும் என்ற நிலை வரும்போது, அவன் கும்பலில் நுழைந்து பலர்க்கும் முன்னாக விரைந்து, அவ்வாயிலில் இருந்து கட்டணத்தாளைப் பெறுபவனைக் கடக்க முற்படுவான். ஆற்றலால் கடந்தும் செல்வான். கட்டணத்தாள் உள்ளவர்கள் அவனைவிடப் பிந்தியவர்களாவார்கள். மணிவாசகரும், நடிக்கும் தாம் வீட்டைடைதற்குரிய குணங்கள் இல்லா திருக்கவும் அவையுள்ள பக்குவர்களைவிட வீட்டைய விரைவதாகக் கூறிக் கொள்ளுகிறார்.

"தவமே புரிந்திலன்; தண்மலர் இட்டு முட்டாது இறைஞ்சேன்."

"ஆமாறுன் திருவடிக்கே அகம்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்."

என்பனவாகத் தம் குறைகளைக் கூறிக் கொண்டார் அவர். அவர் கூறியதற்கேற்பவும் தலைப்புக்கேற்பவும் ஓர் உண்மை காணலாம்.

உண்மையிலேயே நடிப்பவர்க்குத்தான் நல்லகாலம் விரைந்து வரும் என்று கூறலாம். ஒருவன் நல்லவனாக விளங்க வேண்டும் எனின் அவன் நல்லனவற்றை உளமார மேற்கொள்ள வேண்டும். அப்போது அவன் ஒருகுறிக்கோளும் இல்லாமல் மேற்கொள்ள நேரும். அவன் உலகினரால் நல்லவன் என்று கூறப்பட நெடுங்காலம் ஆகும். அவன் நல்லவனாக விளங்குவதும் சிறிது சிறிதாகவே நடைபெறும். தீய ஒழுக்கம் உடையவன் ஒருவன் நல்லவன்போல விளங்க எண்ணுவானாயின் அவன் ஒரு குறிக்கோள் உடையவனாவான் ஏதேனும் ஓர் உயர்ந்த பொருளையோ - புகழையோ - பதவியையோ குறிக்கோளாகக் கொண்டவனாவான். அதனைப் பெறுதற்குத் தன் தீயனவற்றை மறைத்து நல்லனவற்றையே மேற்கொண்டவன்போல் நடிப்பான். இயல்பாகவே நல்லவன் செயலைவிட இவன் நற்செயல் மிக விரைவில் வெளியில் பரவும். அதனால் புகழ் - பொருள் - பதவி கிட்டும். கிட்டிய அளவில் இவன் நின்றுவிடமுடியாது. கிட்டியதை நிலைக்க வைக்கவேண்டும் ஆதலின் இவன் அதற்காகத் தன் தீய குணங்களை ஒவ்வொன்றாக விட நேரிடும். உண்மையாகவே நல்லனவற்றைப் பற்றிப் பிடிப்பான். நாளடைவில் நல்லவனாகவே விளங்குவான். இத்தந்திரத்தினை அரசியலார் கைக்கொள்வதைக் காணலாம். தம் அரசியலைத் தாக்குபவனுக்கு ஓர் உயர்பதவி கொடுத்து அவனையே தம் அரசியலைத் தாக்குதலை ஒழித்ததோடு போற்றுதலையும் செய்யச் செய்வதைக் காண்கின்றோமன்றோ? மணிவாசகரும்,

"உலவாக் காலம் தவம்எய்தி
உறுப்பும் வெறுத்திங் குனைக்காண்பான்
பலமா முனிவர் நனிவாடப்
பாவி யேனைப் பணிகொண்டாய்."

என்று கூறியுள்ளார். இந் நிலையில் படிப்படியாக நல்லனவற்றையே மேற்கொண்டு ஒழுகும் ஒருவனைவிடத் தீயவன் ஒருவன் தான்கொண்ட குறிக்கோள் நிறைவேறுவதற்காக நல்லனவற்றைக் கடைப் பிடித்து நடிப்பின் அக் குறிக்கோள் கிட்ட,

அதனை நிலைக்கவைக்க மேலும் நல்லனவற்றையே கடைப் பிடித்து, நடிப்பை ஒழித்து, உண்மையிலேயே நல்லவனாதல் மிக விரைவில் நிகழ்வதாகும். திடீர் மாறுபாடு நிலைத்ததாகவே யிருக்கும். அதனால்தான் "நடிப்பவர்க்கே நல்ல காலம்" என் பதிலும் உண்மையுண்டு என்று கூறுகின்றேன்.

உலகில் யாவரும் முதலில் நடிக்கவே செய்கிறார்கள். பின் னரே உண்மையுள்ளவராகிறார்கள். இறைவன்பால் அன்புடைய வர்களும் பெரும்பாலும் அப்படிப்பட்டவரே. சிலர் "அன் பில்லை; அதனால் நான் கோயிலுக்குப் போவதில்லை" என்பர். அன்போடு செல்வதுதான் சிறந்தது. ஆனால் சென்று சென்று வருவதாலும் அன்பு ஏற்படும். அதனால் அன்பில்லையென்றாலும் செல்லுதல் வேண்டும். நீந்தத் தெரிந்து கிணற்றில் இறங்குவது தான் நல்லது. கிணற்றில் இறங்கி நீந்தக் கற்றுக்கொள்ளுதல் வேண்டும். நீந்தத் தெரியாதவன் கிணற்றில் இறங்கினால் பார்ப் பவர் தடுப்பர். தடுப்பார் தடுக்கட்டும் என்று எண்ணி முழங் காலளவு நீரிலும் இடுப்பளவு நீரிலும் கழுத்தளவு நீரிலும் ஆக நாளடைவில் இறங்கி மீண்டுமீண்டு நீந்தக் கற்றுக்கொள்வது தான் அறிவுடைமைக் கழகு. அதுபோல "அன்பில்லாதவன் கோயிலுக்குப் போகின்றான். இவன் நடிப்பவன்" என்று புறம் பாகவும், "அன்பில்லாதவன் ஏனப்பா கோயிலுக்குப் போகிறாய். இந்த நடிப்பு நடிக்காதே" என்று நேரிலும் கூறுபவர் பலர் இருப்பர். அவர்கள் கூற்றுக்களைப் பொருள் படுத்தாமல் சென் றால் அன்பு தானே வளரும் ஆதலின் ஒன்றைப் பெற முயலுவோர் அதற்குத் தகுதி தம்மிடம் இல்லை யென்றாலும் உடையவர்போல முயன்றால் உண்மைத்தகுதி வரும். பெறநினைக்கும் அவ் வொன்றும் நல்லதாய் இருத்தல் வேண்டும்.

நாடகத்தில் நடிப்பவன் தன் உண்மைப்பெயர் ஊர் முத லிய யாவும் மறந்து மேற்கொண்ட வேடத்தனாகவே ஆகிவிடு கின்றான். அதுபோல ஒருவன், தான் நடிப்பாக நல்வினை செய்யு மிடத்தும் தான் யார் என்பதையும் மறந்து செய்தல்வேண்டும். அதற்குப் பலன் உண்டு. இறைவனைப் பூசை புரிபவன் நடிப் பானே யானால்-பிறர் காணுமளவில் சிறந்தவன்போலப் பூசை புரிவானானால் அவனும், பூசைபுரியும் அவ்வேளையில் தன்னை மறந்து பூசைபுரிய வேண்டும் அதற்குப் பலன் உண்டு. நாள டைவில் அது வீட்டுலகிற் குரிய நெறியும் ஆகும். அதனால் தான் மணிவாசகர் "நாடகத்தால் உன்னடியார்போல் நடித்து" என்றார். துணிவாக, "வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரி தும் விரைகின்றேன்" என்றும் கூறினார்.

# [1] பத்துக்கால்!

[திரு. சேலங்கிழார்]

என் பெயரை அப்பக்கங்களில் கல்விமான்கள் அறிந்திருந்தார்கள். ஒரு சமயம் கீரம்பூர் மிட்டாதார் அவர்களைப் பார்த்துச் சம்மானம் பெற [2]காங்கேயம்-சேடாசலக் கவிராயர் என்பவர் அங்கு வந்தார். அவர் அழகிய தோற்றத்தார்; அட்டாவதானி. விரைவாக ஆசுகவி பாடும் வன்மையும் இசைப் பயிற்சியும் உடையவர். எத்தனையோ கீர்த்தனங்கள், வழிநடைச் சிந்து போன்ற சிறு நூற்களை அழகாய், விநோதமாய், விரைவிற் செய்பவர். பல பெரிய மிட்டாதார்கள், பிரபுக்களிடம் போய்ப் பரிசு பெற்று வருபவர். இவர் செட்டியாருக்குக் (கீரம்பூர் மிட்டாதாருக்குத்) தன்னைச் சிபாரிசு செய்யும்படி என்னை அணுகினார். நான் அவர் அன்புகூர உபசரித்து, அவரியற்றிய பாடல்களையெல்லாம் கேட்டு மகிழ்ச்சியடைந்தேன். அவர் என் பாடலிற் சில கேட்டு மெச்சினார். அவருடைய புலமைத் திறத்தைக் காணவேண்டுமென்ற கருத்தால் ஒரு விடுகவி இயற்றி, "இஃதொரு பழைய செய்யுள். சில முறை யோசித்தேன், பொருள் விளங்கவேயில்லை. தெய்வத்தைப் போலத் தாங்கள் வந்தீர்கள். இதன் பொருளைத் தங்களால் தெரிந்தால் பயனடைவேன்" என நீட்டினேன். அஃதொரு சிறு வெண்பா:

"கார்நிறமாம் பத்துக்கால் காணும்பார் வாயெட்டுச்
சீர்நிற்கும் நல்லாரைச் சேருமே—ஏர்நிற்க
ஆடும் பணமென்று லஞ்சக்கை மூடுமிதை
நாடியுரைப் பீர்புலவீர் நன்கு."

என்பது.

இதைப் பலமுறை படித்துப் பார்த்தார். "கருநிறம், பத்துக்கால், எட்டுவாய், நல்லோரைச் சேரும், ஆடும், பணமென்றால் பயப்பட்டுக் கையை மூடிக்கொள்ளும் என்று எளிதாகத் தோன்றுகிறது. ஆனால் அது யாதென்று அறிய முடியவில்லை. எத்தனையோ சிக்கலான கவிகளையெல்லாம் நுணுகிச் செய்து,

---

1. புலவரேறு அ. வரதநஞ்சையனார் "சுயசரிதை"யில் ஒரு நிகழ்ச்சி.

2. அட்டாவதானம்-சிலேடைப்புலி-காங்கேயம்-சேஷாசல நாயுடு; இவர் சிலேடை வெண்பாப் பாடுவதில் மிக வல்லவர்.

பொருள்காணும் என் ஆற்றல் இங்குப் பயன்படவில்லை. பின்பு சொல்கிறேன்'' என்றார்.

என் முயற்சியால், கிராமத்திலுள்ள செல்வர்கள் மிட்டாதார் வேண்டிய சம்மானம் செய்தனர், உவந்து ஏற்றுக்கொண்டார். நாளை போகலாமென்று நிறுத்தினேன். நேற்றுக் கூறிய கவி பொருள் விளங்கியிருக்குமே என்றேன்.

அவர்: ஐயா! இரவில் உறக்கமின்றிச் சிந்தித்துப் பார்த்தேன். அஃது என்னையும் ஏய்க்கின்றது, விளங்கவில்லை. உமக்குத் தெரியும் போலும். இது யார் இயற்றியது? எனக்கு ஐயம் உண்டாகிறது. உண்மையை ஒளிக்காமல் சொல்லவேண்டும் என்று வற்புறுத்தினார்.

என்னை மன்னிப்பீர்களா? என்றேன். அவர் நகைத்துக் கொண்டு, "களவு உம்மிடத்ததே; உம்மை மன்னிப்புத் தராமற் போமா!'' என்றார்.

இதன்பொருள் திருமால் என்றேன். படுத்திருந்தவர் திடீரென்று "எழுந்து, என் இஷ்ட தெய்வமா எனக்கு ஒளித்தது? எப்படி? பொருத்திக் காட்டுங்கள்'' என்றார்.

நான்: நீங்களே கவனித்தால் எளிதில் பொருள் விளங்கும்.

அவர்: (கவனித்தார்.) கார் நிறமாம்; சரி! பத்துக்கால்.

நான்: காணும் பார்வாய் என்பதோடு நிறுத்துங்கள்.

அவர்: அடடா, இப்படியா ஏமாற்றுகிறீர்? பத்துத் தடவை இவ்வுலகத்தில் தோன்றும் என்பதுதானே! மேல்.

நான்: எட்டுச் சீர்நிற்கும் நல்லாரைச் சேரும்.

அவர்: நல்லார் இங்கே பெண்கள்; ஆம்! அஷ்டலட்சுமிகளுக்கும் தலைவன்; அதுதானே!

நான்: ஆம்!

அவர்: ஆடும் பணமென்றால் அஞ்சக்கை மூடும். என்ன, இது, பணத்தைப் பற்றிச் சொன்னால் கையை மூடுவது?

நான்: (நகைகொண்டு) அதுதான் கல்வி ஆழம் காணும் அளவுகோல்! பணம்-பாம்பின் படம்!

அவர்: ஆம் ஐயா! (காணாத புதையலைக் கண்டு பிடித்தார் போல) அப்படியானால், 'அம்-சக்கை' என்று பிரித்து அழகிய கண்களை மூடித்துயிலும், அஃதாவது ஆதிசேடனாகிய படுக்கை கொள்ளும் என்பதுதானே! இது புலவர்களை ஏமாற்றி ஏய்ப்ப

தற் கென்று பாடுபட்டு உருவாக்கினீர் போலும். எனக்கே திக்குமுக்காடிப் போயிற்றே என்றார்.

நான்: இது ஒரு குறும்புக் கவி. பாடியவனும் அத் தகையன் என்றேன்.

அவர்: இப்படிச் சில கவிகளும் வேண்டும்; இறுமாப்புடைய சில புலவர்களுக்கு வாய் ஆப்பு! இவ்வெண்பா 'பத்துக்கால்' என்று சீர் முற்றிப் 'பார்வாய்' என்று சீர்பெறுவதால் பொருள் கூறுவோர் கவனத்தை ஆழச்செல்லாது மடக்கி, 'பத்துக்கால் உடையது; நீ பார், வாய் எட்டுடையது' எனத் தடுமாறச் செய் கின்றது. 'நல்லோரைச் சேரும்' என்றது பொதுவாய் நல்ல மக் களைச் சேருமென்று போலிப் பொருள் காட்டி மயக்குகிறது. 'ஆடும்' என்றும் சீர் பிரிந்து அதுவே, கூத்தாடும் போலும் என்று மருட்டுகிறது. 'பணமென்றால் அஞ்சக்கைமூடும்' என் பது எளிதால் விளங்குவதுபோல் தோன்றி ஏமாற்றுகிறது. இதனை நீர்தான் செய்திருக்கிறீர்; உண்மைதானே?

நான்: உங்கள் கருத்தை எப்படி மறுப்பேன்? (இருவரும் விழுந்து விழுந்து சிரித்தோம். உடனே கடிதமும் எழுதுகோலும் எடுத்தார். ஒரு நிமிடமும் இல்லை:

"கஞ்சத்து வந்த கலைமகள்சேர் நின்கவியால்
நெஞ்சத்து வந்தனம்யாம் நேர்மையுடன்—குஞ்சமுறு
மாவரத நஞ்சயபூ மாதங்கி வாழ்புயதா
மாவரத நஞ்சயபூ மா."

என்று ஒரு வெண்பா முடித்து)" "உமக்கு யான் வழங்கும் பரி சில் இது தவிர, வேறொரு பரிசு மில்" என்றளித்தார். "நான் பெரிய கல்வியாளனு மல்லேன்; கல்லாதவனு மல்லேன். ஒருவர் தந்த கடனைக் கூடியமட்டும் திருப்பிச்செலுத்தும் தன்மையேன்" எனக் கூறிவிட்டு:

"ஏடாசல சமான விளையோர்க் கெய்வோன்
தாதைதுயில்
சேடாசல நின்றனக்கு மூண்டோ செப்பாயரிய
செந்தமிழ்ச்சி
லேடாசல சமுகங்களெலாம் எளிதே கடக்குஞ்
சிங்கையினஞ்
சேடாசல ஞங்கவிஞன் போல் விரைவாய்ப்
பாடுஞ் செந்நாவே."

[விளக்கம்: ஏடு ஆசு அல் அசமான எழில் இளையோர்க்கு எய்வோன் தாதை-இதழ் சேர்ந்த பூக்களாகிய, குற்றம் பொருந்

திய கணைகளை, இரவில் நிகரற்ற, இளம் பருவத் தலைவன் தலைவிகள்மேல் ஏவும் மன்மதன் தந்தையாகிய திருமால்; துயில் சேடா- உறங்குதற்கு அணையாகியுள்ள ஆதிசேடனே! (உன்னை மகா கவியென்று கூறக்கேள்வி); செந்தமிழ்ச் சிலேடாசல சமூகங்கள் எல்லாம்-செவ்விய தமிழில் அமைந்த 'சிலேடையணி' என்னும் மலைக் கூட்டங்களை யெல்லாம்; எளிதே கடக்கும்-மிகவும் இலேசாகக் கடந்து செல்லத்தக்க; சிங்கையில் நம் சேடாசலனும் கவிஞன்போல்-'சிங்கை' என்னும் காங்கேய நகரில் வசிக்கும் நம் சேஷாசல கவிஞரைப்போல, விரைவாய்ப் பாடும் பெருந்திறன்- அதிக வேகமாகக் கவிபாடும் பெரிய வல்லமை; சல நின்றனக்கும் உண்டோ செப்பாய்-அதிகமாக உனக்கும் உண்டோ கூறுக என்பதாம். இதனுள் ஆசு என்பது ஆசுகம் என்னும் அம்பின் பெயர்; கடைக்குறை என்று கொள்ளினும் அல்லது பூவிதழ் நிரவில் இளம்பருவத்தோர்க்கு எய்தல் என்னும் தொடர்ச்சொல்லாற்றலால் 'ஆசு' என்பது பண்பாகு பெயராய்க் கணையை உணர்த்திற்று எனக் கொள்ளுதலும் ஒன்று. இரண்டாம் அடியில் 'சால' என்பது குறுக்கல் விகாரமுற்றுச் 'சல' என நின்றது.] இதனை அவர்கட்களித்தேன்; உவகையோடு ஏற்று ஆசிகூறினர்.

---

## சிவவாழ்வு

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

கையிற் றெய்வக் குறளுண்டு
காட்சிக் கினிய பலவுண்டு
மெய்யிற் றரிக்க அணியுண்டு
மேன்மை பெறவே நிலையுண்டு
பையிற் பொருளும் மிகவுண்டு
பங்கிட் டுண்ண உறவுண்டு
செய்யற் கான செயலுண்டு
சிவவாழ் வென்னும் செழிப்புண்டு.

---

# சேக்கிழார் புராணநடை

[திரு. ச. கணபதி முதலியார் எம். ஏ., எல். டி., நெல்லை,]

மொழிப்பற்று ஒருவர்க்கு இன்றியமையாதது; வேண்டற்பாற்று. ஆனால் மொழி வெறி எவர்க்கும் எஞ்ஞான்றும் வேண்டற்பாற்றன்று. பற்று வெறியாக மாறுவது இன்னமிர்தம் கொடிய நஞ்சாக மாறுவதை ஒக்கும். அளவிற்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு என்பது உலக அநுபவப் பழமொழி. எல்லாம் ஓர் அளவினதாக அமைதல் எல்லோர்க்கும் நன்மை பயப்பதாகும். நேரிய நடுநிலை நனிநிலையைத் தரும். பிறந்த பொன்னாட்டையும் பேசிய தாய்மொழியையும் சங்ககாலத் தமிழர் தம்மளவில் நன்கு போற்றி வந்தனர். பட்டினப் பாலைக்குப் பொன் வழங்கிய பார்த்திபனும் முன்னுளன்; பாடினிக்கு வேண்டும் பொன்னீந்த வேந்தனும் பண்டுளன். ஆனால் அன்னார் பிற நாட்டையும் பிற மொழியையும் வெறுத்துரைத்தாரிலர்; இரண்டையும் இழித்துரைத்தாரைப் பழிவாங்காது விட்டாருமிலர். வடபுலத்துக் கனகவிசையர் தமிழ்நாட்டையும் தமிழ் மொழியையும் இகழ்ந்துரைத்த ஞான்று சேரன் செங்குட்டுவன் அவர்களை அடுபோரில் வென்று அவர்களது முடிகள்மீது கண்ணகியின் படிமக்கல்லை ஏற்றித் தன்னடிபணியச் செய்தான் என்பது சிலப்பதிகாரம் கண்ட உண்மை. ஆனால் இஞ்ஞான்று தமிழ்நாடும் தமிழ்மொழியும் எல்லாத் துறைகளிலும் நிலைகுலைந்து சீர்கெட்டு நிற்பது மனந்தளர்தற் குரியதொன்று. தமிழ் நாடு எல்லையில் குறுகிற்று; தமிழ்மொழியின் பெருமை ஒல்லையில் அருகிற்று. எங்கோ, யாண்டோ ஓரிடத்தில் "சொல்லில் அருமை தமிழ்ச் சொல்லடி பாப்பா" என்றும், "தமிழன் என்று சொல்லடா தலைநிமிர்ந்து நில்லடா" என்றும் குரல்கள் எழுப்பப் படுகின்றன. மேல்நாடுகளில் நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் அன்றுபோல் இன்றும் காணப்படுகின்றன. ஷேக்ஸ்பியர்,

"This royal throne of kings, this sceptred isle,
This earth of Majesty, this seat of Mars,
This other Eden, demi-paradise,
..........................................
..........................................
This precious stone set in the silver sea."

என்று இரண்டாம் ரிச்சர்ட் நாடகத்தில் தம் பிறப்பிடமாகிய இங்கிலாந்தை அன்று புகழ்ந்தார். இன்று ஓர் அறிஞர் ஆங்கிலத்தையும் ஆங்கிலப் புலவர்களையும் போற்றுவதைக் காண்மின்., "*No language* in the history of mankind *has*

*enjoyed such world-wide esteem as has befallen the English language* and there are few corners of the world in which it has not been heard. England's sons have carried it across the sea, and a visit to the continent will assure us of the whole-hearted respect with which English is generally respected........ .......Apart from its outstanding utilitarian qualities, *English is also the bearer of some of the noblest thoughts even uttered.* 1t is the tongue which shakespeare spoke; the sonorous organ-voice of Milton and the luscious 'Witch's oils of Colesidge and Keats; it is the mystic language of Shelley; it provided the simple diction of Wordsworth and the virile words of Burke and Shaw. Thus it is interesting to look back into time, to see from *whence came this language now so universally famed and so extensively used*" (Advanced English by W. Walters, B. A.) "ஆங்கிலம் உலகமொழி. அஃதில்லா இடமே இல்லை. மூலை முடுக்குகளிலும் அம் மொழி பேசப்படாமலில்லை. எம் மொழியும் அம் மொழிபெற்ற பேற்றை இதுகாறும் பெறவில்லை. அதுவே உலகில் என்றும் எங்கும் கேட்டிராத அரிய பெரிய விழுமிய கருத்துக்களைத் தாங்கி நிற்கின்றது. அம் மொழியை ஆங்கில மக்கள் கடலுக்கப்பாலும் எடுத்துச் சென்றுள்ளனர். அம் மொழி நாடக ஆசிரியர் திலகமாகிய ஷேக்ஸ்பியரால் பேசப்பட்ட மொழி, எழுதப்பட்ட மொழி. 'Paradise Lost' 'Paradise Regained' 'Comers' 'Lycidas' முதலியவைகளை உலகிற்கு ஈந்த மில்டனால் பேசப்பட்ட மொழி; காலரிஜ்ட், கீட்ஸ் முதலிய விழுப்பே ராசிரியர்களால் பாராட்டப்பட்ட மொழி; வோர்ட்ஸ்வர்த், ஷெல்லி, பர்க், ஷா முதலிய பேரறிஞர்களால் சென்னிமேல் நனிகொள்ளப்பட்ட ஒப்பதும் மிக்கது மில்லா மொழி. உலகமெங்கணும் புகழை நிலை பெறச் செய்த, பயன்படுத்தப்பட்ட இம் மொழி யாண்டிருந்து, எங்ஙனம் தோன்றிற்று?" என்று வினவுகின்றார் அவ்வறிஞர். ஆனால் நம் நாட்டவரோவெனின் தமிழ் நாட்டின் பெருமையைக் காணுக் குருடர்களாய், தமிழ் நாட்டுப் புலவர் மணிகளின் மாண்புகளைப் பேசா ஊமையர்களாய், பாமரராய் உழலுகின்றனர். இக் காலத் தமிழர் பலர்க்கு நாட்டுப் பற்றும் மொழி உணர்ச்சியும் ஒரு சிறிதும் இருப்பதாகப் புலப்படவில்லை. சங்கச் செய்யுள் எற்றுக்கு, காப்பியங்களால் பயன் என்னை, புராணங்கள் எப் பயன்களைத் தருவன, சேக்கிழார் பெரியவரா, கம்பர் பெரியவரா என்பன போன்ற போலி வினக்களை வீணே எழுப்பிச் சொற்கலாம் விளைவிப்பதிலே முனைந்து திரிகின்றனர். அன்றியும் ஆக்கவேலைகளில் ஈடுபடுதற்குரிய நெஞ்சில் உரமும்

நேர்மைத் திறமுமின்றி நூல்களை அழிக்கும் புன்தொழில் வஞ்ச மனமுடையோராய் அலைகின்றனர். எம்மொழிகளிலு மில்லா-கிடைத்தற் கரிய அரிய பெரிய இலக்கியங்களை எரிவாய் மடுக்க-வும் துணிகின்றனர். என்னே அறியாமை இருந்தவாறு! அன்னோர் மணிகளைப் பொறுக்க மாட்டார்; சாவிகளுக்காக ஆவி களைப் போக்கும் மக்கட் பதடியாவார்; கனியிருப்பக் காய்கவரும் உன்மத்தராவார்.

தமிழ்மொழி அமிழ்தினுமினிய ஒருசெம்மொழி; கண்ணுதற் கடவுளும் மதுரையில் கழகமோடமர்ந்து பண்ணுறத் தெரிந்து ஆய்ந்த பசுந்தமிழுமது. அம் மொழி தொல்காப்பியர் தேர்ந் தெழுதிய தொல்மொழி; நக்கீரர், கபிலபரணர் முதலிய சங்கத் துச் சான்றோர் பயின்ற பண்டைய மொழி; எந் நாட்டவரும் புகழும் பொன்னேடாம் திருக்குறளை யாத்துத்தந்த வள்ளுவனார் பாங்குடன் பகர்ந்த பசுங்குதலைமொழி; சிலம்புச் செல்வம் ஈந்த இளங்கோவடிகளும், அணிதிகழ் மணிமேகலையைப் புனைந்து தந்த சாத்தனாரும் நயந்தெழுதிய முத் தமிழ்மொழி; 'சிந்து என்ற நாச் சிந்துமே' என்று வீறுகொண்டு புலவர் நவிற்றும் சிந்தாமணியை உலகிற்கு நல்கிய திருத்தக்கதேவர் விரும்பிப் பாடிய தேமொழியுமது; கச்சியப்பரும், சேக்கிழாரும், கம்பரும், வில்லியாரும், பரஞ்சோதியாரும் புராணங்களாகப் பாடி முடித்த பகரொணாப் பெருமையினையுடைய மொழி; சமய குரவரும், குமரகுருபரரும், சிவப்பிரகாசரும், சிவஞான முனிவரும், இராம லிங்க அடிகளாரும், மீனாட்சிசுந்தரனாரும் உவந்தோதிய ஞானத் தமிழுமது; மெய்கண்ட சிவமும், அருணந்தி சிவமும், உமாபதி சிவமும் பாடியருளிய சித்தாந்தத் தமிழுமது; நன்னூலாரும், தண்டியடிகளாரும், யாப்பருங் கலக்காரிகையாரும் மருந்தெனப் பாடிய இலக்கணங்களையுடைய மொழியுமது.

மேலை நாட்டவர்கள் ஷேக்ஸ்பியரை, மில்டனை, வோட்ஸ் வர்த்தை, ஷெல்லியை, டென்னிசனைப் போற்றிப் புகழ்வதுபோல நாமும் நக்கீரரை, திருவள்ளுவரை, இளங்கோவை, சாத்தனாரை, சேக்கிழாரை, கம்பரைப் போற்றிப் புகழுவோமாக. மேலை நாட் டவர்கள் இலக்கியங்களை ஆராய்ந்து மதிப்பிடுதல்போல் நாமும் நம் நாட்டு இலக்கியங்களைத் திறனாய்வு செய்து மதிப்பிடு வோமாக.

முன் வள்ளுவனாரின் குறள்நடைத் திறனைச் சுருக்கமாக ஆய்ந்தோம்; கம்பன் காவிய நடைத்திறனையும் ஒருவாறு ஆய்ந் தோம். இனிச் சேக்கிழாரது புராணநடையினை ஆய்வோம்.

புராணங்கள் என்பன பழைய வரலாற்று நூல்களே; கதை களே. புராணங்கள் இல்லா மொழிகளே இல்லை எனலாம். ஒவ்

வொரு நாட்டிற்கும் புராணங்கள் உண்டு. ஒரு நாட்டின் இலக்கியம் அந் நாட்டின் பழைய இதிகாசங்கள், புராண காவியங்களிலிருந்துதான் எழுந்திருத்தல் வேண்டும் என்பது கற்றோர் கண்ட முடிவு. மக்கள் அறிவு முதிர்ச்சி பெறு ஆரம்ப நிலையில் எல்லாக் கதைகளையும் நம்பினர். எல்லாப் பொருள்களையும் கண்டு அஞ்சினர். சூரியனும் சந்திரனும் அஞ்சுவதற்குரிய பொருள்களாகவே விளங்கினார்கள். ஆனால் சூரியனும் சந்திரனும் உலகை மூடியுள்ள காரிருளைநீக்கி எங்ஙனம் ஒளியை நல்குகிறார்கள் என்று கண்டு வியந்தனர். எனவே அவர்கள்மாட்டு மக்கட்கு பயமும் பக்தியும் நாளடைவில் உண்டாயின. சிங்கம், புலி, யானை, கரடி, மான், பசு முதலிய விலங்குகளைக் கண்டு முதற்கண் பயந்து ஓடினர். பின் அவைகளில் சிலவற்றை வேட்டையாடிக் கொன்று தங்கட்கு உணவாக்கிக் கொண்டனர். அவைகளின் தோல்களைத் தங்கட்கு ஆடைகளாகவும் ஆக்கிக்கொண்டனர். அவை தங்கட்குப் பயன்படும் பொருள்கள் எனக்கொண்டு அவைகளை விரும்பினர். பயமும் விருப்பமும் ஒருங்கே மக்கட்கு ஏற்பட்டன. பின் அறிவு வளர வளர அவர்கள் பொருள்களின் தோற்றம், இடைநிலை, அழிவு ஆகிய இவைகளைப்பற்றிய வினைவிடைகளினால் விவாதிக்கத் தொடங்கினர். வாதிக்கப் புகுந்துழி பகுத்தறிவு வளர்வதாயிற்று. பின் அதன் துணைகொண்டு எல்லாப் பொருள்களையும் காரணகாரியத்தோடு ஆராய முற்பட்டனர். ஆயுந்திறனும் நாளுக்குநாள் வளர்பிறையென வளர்வதாயிற்று. அறிவு வளர்ச்சியில் மூன்று நிலைகளைக் காண்கின்றோம். அவை அச்சநிலை, வியக்கும்நிலை, ஆயும்நிலை என்பன. பண்டைய மக்கள் இயற்கைப் பொருளை முதற்கண் கண்டு அஞ்சி ஓடினர். அவைகளின் அளவிலாத ஆற்றலைக்கண்டு வியந்தனர். இறுதியில் பகுத்தறிவுத் துணைகொண்டு அப்பொருள்களை ஆராய்ந்தனர். "Primitive men worshipped Nature first as they *feared*, second as they *admired* and finally as they *reasoned*."

இவையே எல்லா நாட்டு அறிவுவளர்ச்சிக்கும் புராண இலக்கிய வளர்ச்சிக்குமுள்ள பொது இயல்புகள். அடுத்து அவ்வியற்கைத் தெய்வங்களைப் பற்றிக் கதைகள் எழுதப்பட்டன. மக்கள் அவைகளை நம்பினர். புராணங்கள் இங்ஙனம் எழுந்தன. தமிழகத்திலும் புராணங்கள் எழுந்தன. அவைகளுள் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளின் முக்கண்கள் போன்றுள்ள புராணங்கள் மூன்று. ஒன்று கந்தபுராணம், மற்றொன்று பெரியபுராணம்; பிறிதொன்று திருவிளையாடற் புராணம். கந்தபுராணம் சிவபெருமானின் நெற்றிக்கண் நெருப்புப் பொறிகளினின்றும் உருப்பெற்ற ஆறுமுக அண்ணலின் அருள்விளையாடல்களைக் கூறும் பழைய வரலாறு. அதனை இயற்றியருளிய ஆசிரி

யர் கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள் ஆவர். கந்தபுராணம் அறுமுகச் செவ்வேளினின் வரலாற்றைக் கூறும் புராணமாக லானும் சிவனுடைய நெற்றிக்கண் பொறிகளினின்றும் அவன் அவதரித்தான் ஆகலானும் அஃது சிவச்சார்புடையது; சிவபெருமானின் நுதற்கண் வழியதுமாம் பெரியபுராணம் சிவனின் வலக்கண் வழியதென்பர். சிவனின் வலதுகண் சூரியன்; சோழர்கள் சூரிய குலத்தைச் சார்ந்தவர்கள் எனப்படுவர். அநபாயன் சோழஅரச குலத்துதித்தவனாகலின் சூரியகுல நல்லான். அவனே சேக்கிழாரைப் பெரியபுராணம் பாடச் செய்தவன். அவன் இல்வழி பெரிய புராணமும் இல்லை. எனவே சிவனின் வலது கண்ணாகிய சூரிய மரபில் தோன்றிய சோழ மன்னனால் பாடச் செய்யப்பட்டமையின் பெரிய புராணம் சிவனின் வலது கண் வழியது என்பது நன்குபுலனும். திருவிளையாடற் புராணம் பரஞ்சோதி முனிவரால் தீந்தமிழில் யாக்கப்பட்ட அருள்நூல். அது மதுரையில் சொக்கேசன் ஆடிய அறுபத்துநான்கு அருள்விளையாடல்களைக் கூறும் திட்பமும் நுட்பமும் வாய்ந்ததோர் பெருநூல். மதுரை பாண்டிய மன்னரது ஆட்சிக்குட்பட்டது. பாண்டிய மன்னர்கள் சந்திரவம்சத்தைச் சார்ந்தவர்கள். சந்திரன் சிவனின் இடதுகண். எனவே திருவிளையாடற் புராணம் சிவபெருமானது இடக்கண் வழியது எனலாம். இம் மூன்றில் சிவனது வலக்கண் மேன்மை பெற்றுத் திகழும் பெரிய புராணத்தை இறையருளால் பாடிக் கொடுத்தவர் தொண்டர்சீர் பரவுவாராகிய சேக்கிழார் சுவாமிகளே ஆவர்.

கந்தபுராணமும் திருவிளையாடற் புராணமும் வடமொழிப் புராணங்களின் நேர்மொழி பெயர்ப்பு நூல்கள், தழுவல்கள். ஆனல் பெரியபுராணம் திருக்குறள் போன்றும் சிலப்பதிகாரம் போன்றும் மொழிபெயர்ப்பு நூல்அல்ல; தழுவல்அல்ல. அஃது ஓர் தனித்தமிழ் நூல். அதற்கு, முதல்நூல் சுந்தரரது திருத்தொண்டத் தொகையாகும்; வழிநூல் நம்பியாண்டார் நம்பிகளின் திருத்தொண்டர் திருவந்தாதியாகும்; சேக்கிழாரின் பெரிய புராணம் இவ்விரண்டின் சார்பு நூலாகும். தொகை, வகை, விரி என்ற மூன்றனுள் விரிநூலாகிய பெரிய புராணத்திற்குத் தொகைநூலும் வகைநூலும் தனித்தமிழ் நூல்களே என்பதை அறிஞர்கள் சிந்தையில் நனிதெளியக் கோடல் வேண்டும்.

அநபாயன் சிந்தாமணியைக் கேட்டுவந்தான். சேக்கிழார் அதனை அவகதை யெனக்கொண்டு சிவகதையை அவருக்கு அருளுவான் பெரிய புராணத்தைப் பாட முற்பட்டார். திருவருள் துணை நின்றது. தில்லைக் கூத்தன் 'உலகெலாம்' என்று முதல் வழங்கினன். சேக்கிழாரும் ஆயிரக்கால் மண்டபம் அமர்ந்து

சிவச் சிந்தனையில் தோய்ந்து நின்று புராணம் பாடி நிறைவுறச் செய்தார். புராணம் நிறைவெய்தியதைக் கேட்ட ஞான்று அநபாயச் சோழன் பெறலாகாப் பெருநிதியம் பெற்றவன்போல் உள்ளங்களிப்பாறுயினன். புராணத்தைச் சேக்கிழாரையே விரித்துரைக்க விழைந்தான். அவரும் கேட்டார்ப் பிணிக்குந்தகைய அவாய் கேளாரும் வேட்பச் சொன்மழை பொழிந்தார். அஞ் ஞான்று மேகம் மின்மழை பெய்தது; விண்ணவர் கற்பக நன் மலர் பொழிந்தனர்; அன்பர்கள் கண்மழை பொழிந்தார்கள்; சேக்கிழார் அடியார் திறம்கூறும் அத்தெய்வத் திருநூலிற்குத் 'திருத்தொண்டர் புராணம்' எனவும் 'மாக்கதை' எனவும் பெயர் சூட்டினார்.

திருத்தொண்டர் புராணம் தனி அடியார் அறுபான் மூவரைப் பற்றியும் தொகையடியார் ஒன்பதின்மரைப்பற்றியும் கூறும் ஒரு வரலாற்று நூல்மாத்திரம் அன்று. அஃது இறையருள் பெற்று இறை முனைப்பின் வழிவந்த ஈடுமெடுப்பு மில்லாத் தெய்வத் திருநூல். இந்நூல் கதைகளுக்கு இராமாயணக் கதைகளும் ஒப்பல்ல, மாபாரதக் கதைகளும் ஒப்பல்ல; இந்நூலை ஆக்கித்தந்த சேவையர் காவலற்கு வான்மீக பகவானும் ஈடல்ல, வேதவியாதனும் உவமையல்ல; சிவனடியார்களின் அருட்டிறத்தினை அளவிடச் சேக்கிழார்க்குத்தான் எளிதில் இயலுமே அன்றித் தேவர்களுக்கும் இயலாது. கருங்கடல்நீரை ஒருவர் கையகத்துங் கொள்ளலாம், கடற்கரை மணலை எண்ணி அளவிடலாம், கடல் மேல்வரும் அலையை எண்ணி இலக்கமிடலாம், கருங்கடலுள் உலாவும் மீனையும் எண்ணி வகையிடலாம்; ஆகாய மீனையும் இலக்கமிட்டு தொகையிடலாம். ஆனல் திருத்தொண்டர் தம் பெருமையை அளவிட்டுக் கூறுதல் சேக்கிழார்க்கே அலது வேறெவர்க்கும் இயலாததொன்று. கலைமகள் பூவை மறந்தாள்; சங்கப் புலவோர் சொற்பாவை மறந்தாள்; பதுமத்தோன் நாவை மறந்தாள்; பொதியமலைக் கோவை மறந்தாள்: சேவையர் காவலனர் திருநாவை மறவாது குடிகொண்டாள் என்பது உமாபதி சிவனாரின் முடிந்த கருத்துக்கள்.

சேக்கிழார் ஒரு கடவுள் மாக்கவிஞர் அவரைப் போற்றுதார் எவருமிலர். அவருடைய தேமதுரத் திருப்பாடல்களுள் ஆழ்ந்து தோய்ந்து கிடந்தோர் அன்றுமுளர்; கிடப்பார் இன்றுமுளர். அவரை மாதவச் சிவஞான சுவாமிகள்,

"தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னுற்சொல்ல வல்லபி ரானெங்கள்
பாக்கி யப்பய னுப்பதி குன்றைவாழ்
சேக்கி ழானடி சென்னி யிருத்துவாம்." (காஞ்சிப்புராணம்)

என்று ஏத்திப் புகழ்ந்தார்.

"திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்தைத்
திணைவளமுந் தெரித்துக் காட்ட
மருத்தொண்டை வாய்ச்சியர்சூழ் குன்றைநகர்க்
குலக்கவியே வல்ல னல்லாற்
கருத்தொண்ட ரெம்போல்வா ரெவ்வாறு
தெரிந்துரைப்பார்."

என்று அவரே மீண்டும் ஐந்திணை வளம், திணை மயக்கம் முதலியவைகளை நெறிப்பட விரித்துரைக்கும் அவரது பேராற்றலை, தெய்வத்திருநலத்தை வியந்து பாராட்டினர். பிற்றை ஞான்று தோன்றிய திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களும் சேக்கிழாரது தெய்வக்கவி நலமாட்சியை,

"பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ"

"நெஞ்சங், கனியக் கனியக் கண்ணீர்வாரக் கவிபாடியவிறைவ"

"கல்லுங் கரையக் கவிபாடுங் கனிவாய் முத்தந் தருகவே"

"தெய்வ மணக்குஞ் செய்யுளெ லாம்"

என்று தாம்புனைந்து பாடிய 'சேக்கிழார் பிள்ளைத் தமிழில் ஆங்காங்கு, கூறிப்போந்து உளங்களித்தார். இஞ்ஞான்று நின்றுலவும் சுவாமி சுத்தானந்த பாரதியாரும்,

"நால்வர் அமுதிருக்க நம்மாழ்வார்
மொழியிருக்கச் சேக்கிழாரின்
பால்வடிசெந் தமிழிருக்கக் கம்பச்சித்
திரமிருக்கப் பகலே போன்று
ஞாலத்தி லறம்விளங்கு நாயனார்
குறளிருக்க நமது நற்றாய்
காலத்தை வென்றோங்குங் கற்பகம்போற்
கனிபெருகக் கண்டி லோமே."

என்றே கூறிச் செம்மாந்திருப்பர்.

சேக்கிழார் திருவாக்கினின்றும் பிறந்த திருத்தொண்டர் புராணம் எல்லா நலங்களும் ஒருங்கே குழுமி மிளிரும் ஒப்பது மிக்கதுமில்லா ஒருசெஞ்சொற் சதங்கை. அஃது ஊனமில் ஞானம் தேடுவார்க்கு ஒரு ஞானக் கருவூலம்; சாதிசமயப் பிணக்கறுத்து இவர் தேவர் அவர் தேவரென்று இரண்டாட்டொழிந்து அடியார் திறம் பேணும் அன்பர்க்கு ஓர் இன்ப அன்புப் பேழை; பத்திவயப்பட்டு பரமனையே பரவி எல்லையிலா ஆனந்த வெள்ளத்தில் மூழ்கித் தோய

விரும்புவார்க்கு அஃது ஒரு பக்திப் பெருங்கடல்; அது கவி நயம் தேடுவார்க்குக் கற்பக தருவென வேண்டிற் றெல்லாம் பயக்கும் ஆற்றலுடையது; சொல்நயம் ஆய்வார்க்கு அது பன்னயம் பயக்கும் பண்பினையுடைய சொற்களஞ்சியமாக இலங்கும் தன்மையது. பொருள்நயம் விழைவோர்க்கு அது நன்னீர் சுரக்கும் தொடுமணற் கேணிபோல் மெய்ப்பொருள் நனி நல்கும் இயல்பினது. காவியச் சுவை வேட்போர்க்கு அது பாவிகப் பண்போடு சொல்லோவியங்கள் பலவற்றைத் தீட்டிக் காட்டும் மாண்பினையுடையது; அகப்பொருள் நயந்தோர்க்கு அது சிற்றின்பங் காட்டிப் பேரின்பம் கூட்டிவைக்க வல்லது. ஆண்டு வரூஉம் காதலும் தெய்வப் போர்வை பெற்றுத் தெய்வ மணங் கமழும் மேம்பாடுடையது; ஆண்டு வருணிக்கப்பட்ட இயற்கைக் காட்சியும் சொல்லொணு மாட்சியினையுடையது. அன்றியும் திருத்தொண்டர் புராணமெனும் அப்பெரிய புராணம் செயற்கரிய செய்த பெரியார்களின் மெய்ச்சரிதங்களைக்கூறும் ஒட்பமும் திட்பமும் நிறைந்த திருநூல். அப் பெரியார்கள் செம்பொருள் கண்ட நிறை மொழி மாந்தர்கள்; ஆசொன்றில்லா அகவொழுக்கமும் மாசொன்றில்லாப் புறவொழுக்கமு முடையவர்கள்; மாசிலா மேனிமேல் பூசுநீறுபோல் உள்ளும் புனிதர்கள்; கோதிலாக் குணக்குன்றனார்கள் அவர்கள்; ஈரவன்பினர்கள்; கேடும் ஆக்கமுங் கெட்ட திருவினர்கள்; ஓடும்செம்பொனும் ஒக்கவே நோக்கும் பெற்றியையுடையவர்கள்; வீடும்வேண்டா விறலின் விளங்கும் கொள்கை வீரர்கள்.

புராணம் எழுதுவோரும் காப்பியம் புனேவோரும் இரு தொழிலில் ஈடுபடுவர். முதற்கண் அன்னர் தம் நூற்குப் பொருளீட்டத் தலைப்படுவர். பின்னர் ஈட்டிய அவ்வொண் பொருளை சொல்லால் தீட்ட முற்படுவர். இன்னணம் பொருளீட்டும் முறையும் சொல்தீட்டுந் நெறியுமே இலக்கியத்தில் பொருள்நடை எனவும் சொல்நடை எனவும் கூறப்பெறும். முன்னையது புலவனின் பொருள் சேர்க்கை முறையையும் போக்கையும் குறிப்பதாகும்; பின்னையது சொற்சேர்க்கை முறையையும் நெறியையும் குறிப்பதாகும். இக் கருத்துக்களைச் சிந்தையிற்கொண்டு சேக்கிழார் தாம் சைவ உலகிற்கீந்த பெரிய புராணத்திற்கு எங்ஙனம் பொருளீட்டினர் என்பதை முதற்கண் ஆராய்வாம்.

(தொடரும்)

---

# வள்ளுவர் காட்டிய அன்புநெறி

[திருவாட்டி, மேரி மாசிலாமணி அம்மையார் எம்.ஏ., எல்.டி.]

(செல்வி சிலம்பு ௩௨, பரல் க, ௭௭-ஆம் பக்கத் தொடர்ச்சி)

அன்புநெறி காட்டும் மற்ருெரு செயல் ஒப்புரவறிதலாகும். அன்புடையான் செல்வம், கைம்மாறு கருதா மாரிபோலவும், நீர்நிறைந்த ஊருணிபோலவும், மருந்தாகித் தப்பா மரம் போலவும், யாவர்க்கும் பயன்படும். அவன் பிறருடன் தொடர்பு பூண்டு, தானும் அவர்களுக்குதவி, அவர் நடப்பையும் தான் பெற்று, வாழ்க்கைக் கலத்தை இனிது செலுத்துவான். அன்பற்றவனே, சுற்றத்தாருக்குக் கொடாமலிருத்தற் பொருட்டே, அவர்களிடத்து அன்பு செய்தலை ஒழித்து, பொருளால் தானும் பயன்பெருது, அறமும் ஆற்ருது, தன் செல்வத்தைப் பிறர் கொண்டுபோகக் காண்பன்.

“ அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர்.”

என்னும் குறள் இதை நன்கு எடுத்துக் கூறுகிறது.

*அன்புநெறி அமைந்த உள்ளம்*

அன்பின்நெறி பிறத்தற்கு இடமாகிய உள்ளம் எத்தகையது என்பதையும் வள்ளுவர் எடுத்தோதுகிருர். ஒருவன் தொடர்புடையவர்களிடத்துக் காட்டும் அன்பு, அதனுடன் நின்று விடுவதில்லை. அவனை மேலும் ஊக்கிச் செலுத்தித் தொடர் பற்றவர்கள்மாட்டும் விருப்பத்தை உண்டாக்கும். அன்புடையான் உள்ளத்தில் “நண்பென்னும் நாடாச் சிறப்பு” குடிகொள்வதால், அவனுக்குப் பகைவர் என்பவரிலர். நொதுமலாளரும்—பகை, நட்பு என்ற ஒன்றுமில்லாத அயலார்—இல்லை. அன்புடையான், தன்னுடன் தொடர்பு கொண்டவர்களாகிய தாய் தந்தை மனைவி மக்கள் முதலியவர்களுடன் முதலில் அன்பு காட்டிப் பின் அவ்வன்பே அவனை ஈர்த்துச் செல்லத் தொடர் பற்ற யாவரிடத்தும் விருப்பம் கொள்கிருன். ஆகவே எல்லாரிடத்தும் நட்புச் செலுத்தும் உள்ளத்தான் என்ற அளவற்ற சிறப்பை எய்துகிருன். அன்புநெறியில் இயற்கை நெறியைப் புகுத்துகிருர் இங்கு வள்ளுவர். ஒருவனுக்குத் தொடர்பற்றவரிடத்து, முதல்முதலில் விருப்பம் பிறப்பதில்லை. இஃது இயற்கை. எனினும் அன்புள்ளம் பெருக்கத்தைக் கொண்டது. வளர்ந்து செல்வது. சுற்றத்தார் மேல்காட்டும் நேயம் சிறிது

வளர்ந்து யாவரிடமும் நட்பாக மாறுகிறது. மேலும் ஒருபடி உயர்ந்து சென்றாலோ, அன்புலகத்தைக் கடந்து சென்று அருளாக மாறுகிறது. அருள், தொடர்பில்லாரிடத்தும் நேயம் காட்டி, ஈற்றில் அஃறிணைப் பொருட்களுக்கு நேரும் இன்னல்களையும் நீக்க முன் வருகிறது. மேலும்,

> "அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
> மறத்திற்கு மஃதே துணை."

என்னும் குறளில் இல்லறமாகிய அறத்திற்கு எதிரான மறமாகிய பாவத்தை மாற்றுதற்கும் அன்பே துணைசெய்யும் என்கிறார். துன்பமிழைத்த ஒருவன்மீது கோபம் பிறக்கிறது. என்றாலும், அவனை நட்பினனாகக் கருதி அவன்மேல் அன்பு செய்தால், அக் கோபம் நீங்குகிறது. கோபமாகிய பாவத்தை நீக்க அன்பு துணை செய்கிறது. ஒருவன் இல்லறத்தை நன்கு நடத்துதற்கு அன்பு பயன்படுவதுமல்லாமல், தீய காரியங்களை நீக்கவும் அன்பு பயன் படுகிறது. உடலினுள்ள பித்தத்தை நீக்க மருந்துப் பொருளாகிய இஞ்சி தேவை. உடலினுள்ள காயத்தைத் தீர்க்கக் காயமருந்து தேவை. அதுபோல, ஒருவன் உள்ளத்திலுள்ள பித்தமாகிய கோபத்தைத் தீர்க்க அன்பாகிய மருந்து தேவை. ஆகவே அன்பின் நெறி இருவகையது. ஒன்று, ஒருவனை நல் வழியில் செலுத்த உதவும். மற்றொன்று, அவன் தீய வழியில் செல்கையில், அவனைத் தடுத்தாட்கொண்டு நல்வழி உய்க்கும்.

உள்ளத்தே அன்பில்லாதவன், இல்லறத்தில் வாழ்தல் கடினமான நிலத்தில் வற்றல் மரம் தளிர்த்தலைப் போலாம் என்று உவமை முகத்தால் அன்பு உள்ளத்தின் அவசியத்தை வள்ளுவர் வற்புறுத்துகிறார். ஏற்கெனவே கடினபூமி. அதில் ஈரம் வற்றிய மரம் எவ்வாறு தளிர்க்கும்? தளிர்க்க இயலாதன்றோ. அவ்வாறே ஒருவன் அன்புள்ளமில்லாமல் இல்லறமாகிய நல்லறத்தைக் கடைப்பிடிக்க வியலாது. இல்லறத்திற்கு அடிப்படை அன்பு.

ஒருவனுக்கு வேண்டிய பொன் வெள்ளி முதலிய பொருட்களும், ஏவலாட்கள்—இப்படிப் பெருக்கிக்கொண்டே போகலாம்—முதலிய யாவும் யாக்கையின் புறத்துறுப்புக்களே. அன்புள்ளமே யாக்கையின் அகத்துறுப்பாம். நாம் கண்ணால் கண்டு, வாழ்க்கையின் நலனுக்குப் பயன்படுத்தும் உறுப்புக்கள் யாவும், கண்ணால் காணாது, உள்ளத்தால் உணர்ந்து, உள்ளத்தால் அனுபவித்து மகிழும் அன்பெனும் பண்பு இல்லாவிடில், உயர்ந்த முறையில் பயன்படா. வாழ்க்கையை நல்வழியில் நடத்த உதவும் சூட்சுமக் கருவி அன்பு. "ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே" என்றபடி அன்பெனும் பண்பு ஆட்டி

னால், இன்னல் நிறைந்த வாழ்க்கையிலும் எல்லையற்ற இன்பமும் பயனும் காணலாம்.

"இல்லானுக் கன்பு இங்கிடம் பொருள் ஏவல் மற்றெல்லா மிருந்தும் அவற்கென் செய்யும்" என்று மற்றொரு புலவர் கூறியது பெரிதும் பொருந்தும். மேலும் கிறித்தவர் திருமறையில், திரு. பவுலடிகள், "நான் மக்கள் பேசும் மொழிகளையும், தூதர் பேசும் மொழிகளையும் பேசினாலும், அன்பு என்னிடத்தில்லாவிடில், பயனில்லை" என்கிறார். வள்ளுவர், "புறத்துறுப் பெல்லாம் எவன் செய்யும்" என்று கூறியதால், வாழ்க்கைக்குப் புறத்துறுப்பு வேண்டாவென்று கூறவில்லை. துறவறத்தைக் காட்டிலும், இல்லறத்தை ஒருபடி உயர்த்தி வைத்த வள்ளுவர் அவ்வாறு கூற இடமில்லை. எனினும், யாவர் உள்ளத்திலும் கொழுந்துவிட்டெரியும் அன்புக்கனல், யாவர் வாக்கிலும், செயலிலும் வெளித்தோன்றிவரும் நிலையிலிருந்தால், வாழ்க்கையில் காணப்படும் புறத்துறுப்புக்கள் பன்மடங்கு சிறப்புடன் தோன்றும் என்பதே அவர் குறிக்கோள்.

அன்பில்லா உடல்கள் எத்தனை அழகுடனும், ஆடை ஆபரணங்களுடனும், கண்களை ஈர்க்கும் தன்மையுடனுமிருந்த போதிலும், அவை வெற்றுடம்புகளே. அன்பே உயிர். அன்பில்லையேல், நட்பில்லை, நாட்டுப் பற்றில்லை; மொழிப்பற்றில்லை; இலக்கிய வளர்ச்சியுமில்லை. நாட்டின்மீது அன்பு கொண்டு அதன் விடுதலையைப் பற்றிய கனவுகண்டான் பாரதி. அதன் விளைவு, அவன் நாட்டுப் பாடல்கள். ரஷ்ய மக்கள்மீது அன்பும் அருளும் கொண்டான் லியோ டால்ஸ்டாய். அதன் விளைவு அவன் இயற்றிய 'புத்துயிர்' போன்ற உயர்ந்த நவீனங்கள். இயற்கைமீது எல்லையில்லா ஆர்வம் கொண்டான் வெட்ஸ்வொர்த் என்னும் புலவன். அதன் விளைவு அவன் இயற்கையின் எழில்பற்றித் தீட்டிய 'டாவ்படில்', 'வானவில்' முதலிய கவிகளும், அவன் எழுதிய சானட் கவிகளுமே.

ஆண்டவன்மீது அல்லும் பகலும் அன்பு செலுத்தி, தானே பேயுருவத்தை விரும்பிப் பெற்றார் காரைக்காலம்மையார். அவர் உலகுக்கீந்த நூல் 'அற்புதத்திருவந்தாதி'. இராமபிரான்மீது ஆர்வங்கொண்டான் கம்பன். அவனும் 'ஆசைபற்றி அறையலுற்றான். மற்று அக்காசுஇல் கொற்றத்து இராமன் கதை, ஆகவே அன்புள்ளம் வெவ்வேறு வழிவகைகளில் வெளிவருகிறது.

அன்புடையாரது உள்ளம் பிறர் துன்பம் கண்டு பொறுமல், தீயிலிட்ட மெழுகுபோல் உருகும். ஏதிலார் துன்பத்தைத் தன்

துன்பம்போல் கண்டு, அத் துன்பத்தை நீக்க முயலும் அன்புடையான் 'வறியார்க்கொன் றீவதே ஈகை' என வறிந்து 'மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று' என்ற உள்ளம் கொண்டவன். பண்டைத் தமிழரின் அன்புள்ளம் ஈகையில் பெரிதும் ஈடுபட்டது. தம்மிடமுள்ள பொருளை, உண்ண உணவும், அணிய ஆடையுமில்லாத யாவர்க்கும் வழங்கி இன்னல் துடைப்பதே அவர்கள் குறிக்கோளாயமைந்தது. புறநானூற்றில், பெருஞ்சித்திரனார் எனும் புலவர் தன் மனையோட்குச் சொல்லிய தாய்க் கூறப்படும் பின்வரும் பாடலில், அன்புள்ளம் ஈகையில் திளைப்பதை நன்கு காணலாம்.

"நின்னயந் துறைநர்க்கும் நீநயந் துறைநர்க்கும்
பன்மாண் கற்பின்நின் கிளைமுத லோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி எதிர்ப்பை நல்கி யோர்க்கும்
இன்னோர்க்கு என்னாது என்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்தும் என்னாது
எல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே."

மேலும் அன்புடையான் பொறுமைக் குணத்தை அணிகலனுய்க் கொண்டவன். 'பொறுத்தார்க்குப் பொன்றும் துணையும் புகழ்' என்றறிந்து பிறனுக்கு மறந்தும் கேடு நினையா மாண்பினன்.

அன்புடையான் உள்ளத்திலிருந்து எழும் சொல் இன்சொல்லே. அவன் நல்லன நினைந்து நல்லன கூறுவான் என்பதை 'நல்லவை நாடி இனிய சொலின்' என்று வள்ளுவர் கூறுவதிலிருந்து அறிகின்றோம். மறந்தும் கொடிய சொற்களைச் சொல்லாத அவன், பிறரைப் புண்படுத்தும் சொற்களைச் சொல்லான். 'நாவினால் சுட்ட வடுவின்' துன்பத்தை நன்கறிந்தவன் அவன்.

### வாழ்க்கையின் பயன் அன்பு செய்தல்

உலக மக்கள் உயிருடன் பெற்ற உடலின் தொடர்பை, அறிவுடையோர், அன்போடு பொருந்துவதற்காக வந்த நெறியின் பயன் என்று கூறுவர் என்னும் பொருள்பட,

"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போ டியைந்த தொடர்பு."

என்றார் வள்ளுவர். உலகத்தில் மனிதன் தோன்றுவதன் பயனை, உலக மக்கள் வெவ்வேறுவிதமாய்க் கூறுவர். வாழ்க்கை வாழ்வதற்கே என்பது ஒருசாரார் கொள்கை. 'வாழ்க்கையில்

இன்று கிடைக்கும் இன்பங்களை யெல்லாம் ஒன்றுவிடாமல் துய்த்து லயித்துக் கிடப்போம். ஏனெனில் நாளைக்கே நம் முடிவு வரலாம்' என்ற இத் தத்துவத்தைக் கொண்டவர் எப்பிக் கூரியர் என்ற வகுப்பார். வாழ்க்கையில் காணக்கூடிய பயனொன்றுமில்லை. வாழ்க்கை ஒரு பாலைவனத்தை யொத்தது. பாலைவனத்தைக் கடந்தே தீரவேண்டுவதுபோல், வாழ்க்கையை எவ்வாறேனும் வாழ்ந்து தீரவேண்டும் என்ற தத்துவத்தைக் கொண்டவர் மற்றுமொரு சாரார். வள்ளுவர் கொள்கை இவை களினின்றும் மாறுபட்டது. ஒருவனின் முற்பிறவியின் பாவ புண்ணியங்களே மறுபிறவியை உண்டாக்கும் என்ற கொள்கையை வள்ளுவர் கொண்டபோதிலும், இந்த உடலுடன் உயிர் பொருந்தி நாம் உலகில் வாழ்வதன் பயன் அன்புசெய்தற் பொருட்டே; வாழ்வதற்கும் இன்பம் துய்ப்பதற்கும் மட்டு மன்று என்கிறார். வள்ளுவரது அன்பு நெறியை ஏற்றுக் கொண்டால், வாழ்க்கைக்கு எத்தகைய உயர்வு வருகிறது! கேவலம், ஐயறிவுயிர்களும் உண்டு உறங்கி வாழ்கின்றன. ஆனால் மனிதனே அன்பு செய்தற் பொருட்டு வாழ்கிறான். அவன் செல்லும் நெறி அன்பின் நெறி; அவன் பெரும்பயனும் அன்பு ஒன்றே.

வாழ்க்கைக்கண் இன்பம் பலவும் நுகர்ந்து அதன்பின் விண்ணுலகில் சென்று அடையும் பேரின்பத்தை, அன்பு நெறியால் வந்த பயன் என்று பிறர் கூறுவதுபோல், வள்ளுவரும் கொண்டார். மேலுலக இன்பம் அடைதற்கு வழி, வாழ்க்கை யில் அன்பாகிய பண்பை வளர்த்து, அதன் வயப்பட்டு நடத்தலே யாகும். உலகிலுள்ளபோதே அன்பு நெறியின் வயப்பட்டோர், மேலுலகப் பேரின்பத்திற்கும் வழிகோலிக்கொள்கின்றனர்.

### அன்பு நெறியா? அணுகுண்டு நெறியா?

"இன்னா செய்தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்."

என்று வள்ளுவர் கூறிப்போந்த அன்பு நெறி எங்கே?

"அழிப்போம் எவரையும் அணுகுண்டு நெறியால்
அனைவரும் அழிவர் அணுகுண்டு வெடியால்."

என்று கொள்ளும் தற்கால அழிக்கும் நெறி எங்கே? வள்ளுவர் கூறிய பொன்மொழிகள் தனி மகனுக்குமாத்திரமே உரியன வல்ல; மக்கள் சமுதாயத்துக்கும், உலகப் பெருங்கூட்டத்திற் கும் உரியன. உலகில் இன்று நாம் காண்பது யாது? ஒருபுறம் அன்பின் எதிரொலி. மற்றொருபுறம் அணுகுண்டின் எதிரொலி.

ஒருபுறம், தனி மனிதனும், சமூகங்களும் அன்புடைமையே சிறந்தது என்று ஓலமிட்டாலும், வாழ்க்கையில், அன்புடைமையின் செயல்களை நாம் அதிகம் காண்பதில்லை. உலக விவகாரங்களிலும் இப்படியே. உலக நாடுகள் ஒன்று சேர்ந்து உழைக்க வேண்டுமென்று, ஐக்கிய நாடுகள் தாபனத்தை அமைத்து, கல்வி, இலக்கியம், பண்பாடு, விவசாயம், உணவு, உடல்நலம் இத்துறைகளிலெல்லாம் தொடர்பு பூண்டு ஒத்துழைக்கின்றன. மறுபுறம், தற்காப்புக்கெனக் கூறிக்கொண்டு, பிறர் அழிவுக்காக அணுகுண்டுகளையும், நீர் வாயுக் குண்டுகளையும் தயாரித்துப் பரிசோதனை செய்துகொண்டிருக்கின்றன பேரரசுகள்.

விஞ்ஞானத்தின் வளர்ச்சியால் உலகப் பெருநகர்களை ஒரு விநாடிக்குள் அழித்துத் தீர்க்கக்கூடிய குண்டுகள், கிழக்கும் மேற்கும் பயிற்சிக்காக வெடித்துக்கொண்டிருக்கும் இக் காலத்தில், அன்பு நெறிக்கு இடமுண்டா? அன்பு நெறி, அருள் நெறி போன்ற சொற்றொடர்கள், இக்கால உலகில் வலியிழந்த சொற்றொடர்களாகத் தோன்றவில்லையா? அன்பு நெறி, தனி மக்கள் வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்படும் நெறி என்றும், மக்கள் பெருங்கூட்டம் அரசியல் விவகாரம் இவைகளில், அரசியல் தந்திரங்களும் கோட்பாடுகளுமே பெரும்பாலும் பயன்படுகின்றன என்பதும் ஒருவாறு உண்மைதான். அன்பு நெறி, தனி மக்கள் உள்ளத்தில் தோன்றி, மக்கள் சமுதாய வாழ்க்கைக்கு மெருகு கொடுத்துச் சிறப்பிக்கும் வழி. அன்பு நெறியை வரையறுத்து, அரசியல் விவகாரங்களில் புகுத்துதல் இயலாது. ஏனெனில் அன்பு என்பது, வாழ்க்கையை ஓர் உயர்ந்த முறையில் காணும் ஓர் சித்தாந்தமே. எனினும் அரசியல் தந்திரி, அணுகுண்டு ஆக்குவோன், அணுகுண்டைப் பகைவர்மீது வெடிப்போன்—இவர்கள் யாவரும் அன்பு நெறிக்கு அடிப்பட்டவர்களே. கலிங்க யுத்தத்தில் கலந்துகொண்டான் அசோகன். எனினும் அன்பு நெறி அவனை ஆட்கொண்டு அடிமையாக்கி விட்டது. உடனே போரை நிறுத்தினான். அகிம்சா தர்மத்தை எங்கும் பரப்பினான். அலெக்ஸாண்டர் உலக நாடுகளை வென்று தன்னடிப்படுத்தினான். போரஸ் புருஷோத்தமனை வென்று அவன் நாட்டைப் பெறுவதற்குப் பதில், அவன்மீது கொண்ட நட்பினால், நாட்டை அவனுக்கே மீண்டும் கொடுத்துச் செல்கிறான். அன்பு நெறியை அரசியல் நெறியோடு பொருத்த இடமில்லாவிடத்தும், அரசியல் தலைவருள் சான்றோராகிய சிலர் அன்பு நெறிக்கு அடிப்பட்டு உலகத்தின் சரித்திரத்தை மாற்றியிருக்கிறார்கள்; போரையும் பூசல்களையும் நீக்கியிருக்கிறார்கள். அதுபோலவே, இக்காலச் சான்றோர்களால் இன்றும் அது

கூடும். அப்படிப்பட்ட சான்றோர், எக்காலத்திலுமுளர். அதனாலேயே உலகம் அழியாது என்பதை,

“ சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை.”

என்றார் வள்ளுவர். ஆகவே, அழிவுநெறியாகிய அணுகுண்டு நெறியைக் காட்டினும், அன்பு நெறிக்கு எக்காலமும் ஓர் உயர்ந்த இடமுண்டு.

அன்பர்களே! இதுகாறும் வள்ளுவர் காட்டிய அன்பு நெறி பற்றி என் சிற்றறிவுக்குத் தோன்றிய ஒருசில கூறினேன். வள்ளுவப் பெரியாரின் மாண்புகளை மீண்டும் உங்கள் நினைவி லிருத்திக்கொள்ளுமாறு உங்களைக் கேட்டுக்கொண்டு, உங்கட்கு வணக்கம் கூறி முடிக்கின்றேன். வாழ்க வள்ளுவர்; வாழ்க வள்ளுவர் காட்டிய அன்பு நெறி.

---

## சிந்தனைக்குச் சில

**[தொகுப்பு: நாகை வேலன்]**

அன்பு என்பது ஒரு பொற்சங்கிலி. அதனால் பிணைக்கப் பட்டதுதான் சமுதாயம். —கதே.

தத்துவம் என்பது விண்ணிலே கோட்டை கட்டுவதோ அல்லது வீண் எண்ணங்களோ அல்ல; மக்கட்குழு வாழ்க்கை யின் சட்டமும் அதன் நடத்தையுமே தத்துவத்தின் நோக்க மாகும். —தாம்சன்.

உண்மை உலகிற்கு எல்லை உண்டு; கற்பனை யுலகிற்கு எல்லை இல்லை. ஒன்றின் எல்லையை விரிக்க முடியாமையால் மற்றொன்றைச் சுருக்கிக்கொள்வோம். ஏனெனில் இவ்விரண்டு எல்லைகளுக்கிடையே உள்ள வேற்றுமையினின்றுதான் எல்லாத் தீமைகளும் விளைகின்றன. அதுவே நம்மை மகிழ்ச்சி யற்றவர்களாகச் செய்கிறது. —ரூசோ.

விடுதலை பெறுவது என்று முடிவு கட்டிவிட்ட ஒரு சமுதாயத்தை அடிமைப்படுத்தி வைப்பது மிகக் கடினம். அதைவிட ஒரு மலையை வேரோடு பெயர்த்துவிடுவது எளிது. —சவுத்தி.

---

# காவியச் செல்வி

[தமிழன்பன்]

செந்தமிழாஞ் சீராரும் நாடு தன்னுள்
சிறந்தொளிரும் காவியமென் னன்பின் செல்வி!
செந்தேனுய் இனித்தென்னைக் கொள்ளை கொண்டாள்
சிரித்துநிதம் ஆடுகின்ருள் உள்ளந் தன்னில்!
சிந்தனையில் கருத்துருவில் விரிந்து நின்றே
சீரிளமைத் திறங்காட்டி ஒளிரு கின்ருள்!
விந்தையிலை அவளிளமைத் திறனைக் காண்போர்
வீயாமல் மூவாமல் வாழ்தல் தானே!

உண்மைநறு முயற்சியெனும் உரவோர் பெற்ற
ஊனமிலாக் கோதையவள் நடுவாந் தூய
நண்பாருந் தாதிதன்னல் நவையொன் றில்லா
நயத்தகுசீர் மெய்யறிவாம் மனையின் உள்ளே
எண்வளர வளர்த்திடவே பெற்ருள்! அன்னேள்
இளமையுடன் பெருகுகின்ற அழகுங் கண்டே
பண்பாருங் கற்பனைதான் தோழி யானுள்!
பாங்காக நலமெல்லாம் வாய்க்கப் பெற்ருள்!

பொங்கிவரும் இளமைதனில் புரைமை தீர்ந்த
புத்தணியால் மெத்தவெழில் கொழிக்கப் பெற்ருள்!
சங்கமெனுஞ் சோலையிலே தோற்றங் கொண்டே
சாகாமல் உலவிவரும் இன்பத் தென்றல்
மங்கையவள் பொன்மேனி வாடா வண்ணம்
மாசறவே மருவிடவும் அவள்தா னிங்கே
மங்கிவரும் வானமதில் வண்ணங் காட்டி
வளருகின்ற மதியமென உலவு கின்ருள்!

அன்னளின் பொன்னுருவில்! அன்புப் பேச்சில்!
அருள்ததும்பும் விழிகளின்நல் லழகு தன்னில்!
கன்னலென இனிக்கின்ற கவினர் பண்பில்
காணரிய புதுமெருகில்! கனிவு தன்னில்!
என்னுளத்தைப் பறிகொடுத்தேன் இன்பில் மூழ்கி!
ஈடற்ற அவள்துணையை இழந்து விட்டால்!
நின்றிங்கே வாழ்ந்திடுதல் நோயாய்ப் போகும்!
நீடித்து வாடாமல் நிகழ்வ தோரேன்.

---

# மறைமலையடிகளின் மணிமொழிகள்

(செல்வி சிலம்பு-௩௨, பரல்-௧, ௩௮-ஆம் பக்கத் தொடர்ச்சி)

(௧௬) கடவுள் தூயதன்மை யுடையரென்று கொண்டால், அவர் உயிர்களின் நன்மையினை யன்றி வேறொன்றனையுங் கருதார். அவர் எல்லாம் வல்லரென்று கொண்டால் அவர் அந் நன்மையினை உயிர்களுக்கு முடித்துத்தர வல்லுநராவர். அவர் எல்லாம் உணர்பவர் என்று கொண்டால் அவர் இருளிலும் நம்மைக் காண வல்லுநராவர். அவர் நடுநிலையாளரென்று கொண்டால் நம்முடைய தவறுகளைக் கண்டு அவர் ஒறுக்க வல்லுநராவர். அவர் அன்புடையரெனக் கொண்டால் நம் இழுக்கங்களை அவர் மன்னிக்கவும் வல்லுநராவர். அவர் மாறுத இயற்கையரென்று கொண்டால் அவரது உதவியில் நாம் நம்பியிருக்கக்கூடும்.

(௧௭) கடவுள் மற்றை எல்லா உயர்ந்த தன்மைகளும் உடையராயிருப்பினும் அவ்வருட்டன்மை ஒன்றுமட்டும் இலராயின் இவ்வுலகத்தையும் இவ்வுலகத்துற்ற உயிர்களையும் நாம் காண்ட லியலாது.

(௧௮) பிறர்படுந் துன்பத்தைக் கண்டு இரக்கப்படாத ஒருவன் அவர்கட்கு ஏதோர் உதவியுஞ் செய்யக் கண்டதுண்டோ? இரக்கமும் ஈரநெஞ்சமும் இல்லாதவர்கள் பிறரோடு அன்பாய்ப் பேசினும் எங்கே அவர்க்கு உதவிசெய்ய நேர்ந்துவிடுமோ என்று நெஞ்சம் நடுநடுங்கிப் பிறரொடு பேசாதும் அவரோடு அளவளாவாதுந் தனித்துறவு நிலையை அடைதலைக் கண்டாமன்றே? இத்தகைய துறவிகளுள்ளே கடவுளும் ஒருவராய் விடுவாராயின், எமது உயிர்வாழ்க்கை இவ்வுலகத்தில் நடைபெறுமென்று கனவிலும் நினைதல் கூடுமோ? ஆதலினாலன்றே, நம் சைவசமயத் தெய்வமாகிய சிவபிரான் தன்னை இத்தகைய துறவுநிலையிற் சேர்த்துக்கொள்ளாது கங்கையும் உமையுமாகிய இருமனைவியரையும், பிள்ளையார் முருகனென்னும் இரண்டு மக்களையும் உடையனாய்த் தனக்கு அன்பே வடிவென்பதை உணர்த்தலாயினன்.

(௧௯) இறைவனுடைய அன்பையும் இன்பத்தையும் பெறுதற்கு உரிமை உடையராய் அவனை நெருங்கி நிற்கும் நாமெல்லாம் அவனுக்கு மனைவியரும் மக்களுமே யாவம்.

(௨௦) மக்களுள் எத்துணை இழிந்தோருங் கடவுளென்னுஞ் சொல்லைக் கேட்ட அளவானே அவனைக் காண்டலில் வேட்கையுங் கருத்தும் உடையரா யிருக்கின்றனர். அவ்வாறவர் வேட்கை மிகுந்துள்ளாராயினும், அவ்வேட்கையின்படி கடவுளைக் காணும் முயற்சியிலேயே அழுந்திநிற்க மாட்டாமல் உலக இன்பங்களில்

இழுப்புண்டு போதலின், அவர்கொண்ட வேட்கை கைகூடாது ஒழிகின்றது.

(உக) பிற சாதியாரிற் றாழ்ந்த குலத்தவராகத் தம்மாற் கருதப்பட்ட வகுப்பினர், தம் சிலரைத் தென்னாட்டுத் திருக்கோயில்களினுள் நுழையவிடாத போலிச் சைவரின் புல்லிய செய்கையால், எத்துணைப் பெருந் தீங்குகள் நிகழவிருக்கின்றனவோ என்பதை நினைக்க எம் நெஞ்சம் நடுங்குகின்றது. இத்தடையால் இதுவரையில் நிகழ்ந்த தீமைகட்கே அளவில்லை. எல்லா மக்களையுந் தோற்றுவித்த இறைவனாகிய தம் அப்பன் அமர்ந்திருக்கும் பொது இடமாகிய கோயிலிற் சென்று மக்கள் எல்லாரும் மனங்கரைந்து வணங்கவேண்டியவராயிருக்க, அப்பொது இடத்திலும் பொல்லாத சாதிவேற்றுமையை நுழைத்து, இறைவன் படைத்த மக்களுட் பெரும்பாலாரைத் தாழ்ந்த சாதியாராக்கி அவர்களைக் கோயிலினுள் நுழையவிடாத கொடுஞ் செய்கையினுங் கொடியது வேறு யாதிருக்கின்றது.

(உஉ) தாழ்ந்த சாதியார்கள் கோயிலினுட் புகுந்து தம்மை வணங்கலாகாதென்று கடவுள் தடைசெய்திருக்கின்றாரா? அப்படியொன்றுமில்லையென்பதும், சாதி இறுமாப்புக்கொண்டோர்க்குக் கடவுள் அருள்புரியாமல், தாழ்த்தப்பட்ட சாதியார்க்கே அவர் மிகுதியும் அருள்புரிந்திருக்கின்றாரென்பதும் உண்மை வரலாறுகள் பலவற்றால் விளக்கிக் காட்டினமன்றோ?

(உஙு) கடவுளை நேரேகண்டு அவனதருளைப்பெற்ற உண்மையடியார்களாவது தாழ்த்தப்பட்ட சாதியார்களை உள்ளே விடுதலாகாதென்று விலக்கியிருக்கிறார்களா? அப்படியும் இல்லையே. அவர்கள், ஈழக்குலச் சான்றாராகிய ஏனாதி நாயனாரையும், பறைக்குடியினரான நந்தனாரையும், பாணர் குடியினரான திருநீலகண்ட யாழ்ப்பாணரையும், செம்படவர் குடியினரான நந்தனாரையும், பாணர் குடியினரான திருநீலகண்ட யாழ்ப்பாணரையும், செம்படவர் குடியினரான அதிபத்தரையும், குயவர் குடியிற் பிறந்த திருநீலகண்டரையும், வேடர் குடிப்பிறந்த கண்ணப்பரையும், வண்ணார் குடிப்பிறந்த திருக்குறிப்புத் தொண்டரையும், எண்ணெய் விற்கும் வாணிகர் குடிப்பிறந்த கலியனாரையும் வணங்கி அவர்களைக் கோயிலினுள் நுழைய இடங்கொடுத்த மட்டில் அமையாது, அவர்களையெல்லாம் ஏனை நாயன்மார் திருவுருவங்களோடு உடன் வைத்து, அறுபத்து மூவராக ஒவ்வொரு சிவபிரான் திருக்கோயில்களிலும் ஒவ்வொரு நாளும் வழிபாடு செய்து வருகவெனவுங் கட்டளையிட்டிருக்கின்றன ரல்லரோ?

(தொடரும்)

# பல்லாவரம் மறைமலையடிகளார் கடிதங்கள்

## கடிதம் - ரு

**18—7—1930-இல் செல்வப்புதல்வி நீலாவுக்கு எழுதியது.**

நீ எழுதிய கடிதங்களும் வற்றல் அப்பளங்களும் வந்தன, பெற்று மகிழ்ந்தோம். என்னிறுதிக் காலம் வரையில் யான் ஒருவனாகவேயிருந்து எல்லா முயற்சிகளிலும் பட்டுழலும்படி என் கொடிய ஊழ்வினை எனக்கு வகுத்திருத்தலால், சில நேரங்களில் இன்ன முயற்சியைத்தான் செய்வதென்றறியாமற் றிகைத்துக் கலங்குகின்றேன். பலமுறை உனக்குக் கடிதம் எழுதத்துவங்கியும் முடியவில்லை.

கட்டிடவேலை பெரும்பாலும் முடிந்துவிட்டது, பூச்சு வேலை நடக்கின்றது, பின்கட்டு வேலை ஆகவேண்டும். இது வரையில் ஐயாயிரத்து ஐந்நூறு ரூபாவரையிற் செலவாய் விட்டது. கையில் உள்ள இன்னுஞ் சிறிது தொகையிலும் ஒரு பகுதி செலவாய் விடும்போல் தோன்றுகின்றது. இந்த நெருக்கடியில் நின் அன்னை நகை செய்யச் சொல்லி என்னைத் துன்புறுத்துகின்றனள். ஞானத்துக்கு 6-பவுனில் ஒரு சரடு செய்தாகின்றது. முடிந்ததும் அங்கு அனுப்பிவைக்கிறேன்.

கோர்ட்டுச் சல்லியம் பெரும்பாலும் தீர்ந்தது. சைதாப் பேட்டை நாராயணசாமிச் செட்டி பணந்தான் பாக்கி, அவர் பணஞ் செலுத்தாமையால், அவரது வீட்டை இரண்டாயிர ரூபாய்க்கு 16-ஆம் நாள் நான் ஏலம் எடுக்கலாயிற்று. அந்த வீட்டைப்பற்றி இன்னும் எவ்வளவு துன்பம் வருமோ அறிகிலேன். நமது தோட்டத்து ருமானியா மாமரத்திற் காய்த்த காய்களில் பிறராற் கவரப்பட்டன போக மிஞ்சியவற்றில், முப்பதுக்கு மேல் முற்றின காய்களை ரயில்வே பார்சலில் அனுப்பிப், பற்றுச் சீட்டு இதனுடன் அனுப்பியிருக்கின்றேன். உடனே பெற்றுக்கொண்டு இவைகளை நன்றாய்ப் பழுக்க வைத்துக் கனிகளைப் பயன்படுத்து. இனி நீ கூழ்வடகம் அப்பளம் முதலியன அனுப்ப முயற்சி எடாதே. அவை சுவையாயிருப்பினும் அவைகளில் என் மனம் இப்போது பற்றவில்லை. இறுதிக் காலத்தில் வறுமையால் துன்புற நேருமோ என்னும் ஏக்கம் இப்போதே துவங்கிவிட்டது. ஊழ் வலிதோ, திருவருள் வலிதோ, என்பது இனித்தான் உறுதிப்படவேண்டும்.

அருமை மங்கையைப் பார்க்கும் அவா மிகுந்துளது. இங்குள்ள கட்டிடவேலை முடிந்தவுடன் நீயும் அவளும் வரல் வேண்டும். நின்கணவன் இப்போது எங்கிருக்கிறார்? இங்குள்ளார் அனைவரும் நலம்; பிற பின்.

மறைமலையடிகள.

## கடிதம் - ௯

### "தானே தமிழ் கற்குமுறை" என்ற நூலைப்பற்றிய கடிதம்

இரதம், வத்தி, ஒட்டியாணம், ஔடதம், சக்கரம், தராசு, பசு, சன்னல், அன்னம், கரம், சரம், ஊனம், பங்கம், படம், சங்கம், வனம், யமன், அங்கம், கங்கணம், சங்கமம், சஞ்சலம், இலஞ்சம், அண்டம், கண்டம், கண்டனம், கம்பம், கந்தம், தந்தம், மந்தம், கந்தன், வந்தனம், சம்பவம், ஆரம்பரம், நவம்பர், மச்சம், அர்ச்சகர், கட்டம், நட்டம், பட்டர், பதட்டம், அத்தம், அத்தர், வத்தல்(?) உத்தரம், ஆயத்தம், இரத்தம், பலப்பம்(?) சர்ப்பம், சம்மதம், பல்லடம்(?) அபயம், ஆலயம், இதயம், உதயம், சதயம், கரணம், சரணம், மரணம், சலனம், கவனம், தகனம், வசனம், வதனம், ஆசனம், நடனம், கடகம், நரகம், கமலம், வரதன், கபடம், தவசம்(?) இலவசம், அவயவம், மரகதம், சமரசம், அவசரம், ஆபரணம் 'உற்சவம், இரசம், இட்டம்' கனத்த, நவ்வல்(?) மரம், சங்கரன், வரதன் பத்தன், வர்த்தகம், சூரியன், கௌரி, தாதா, இனம், தாகம், 'சகாயம் அபாயம், மயானம், அபராதம் சமாதானம், பாதம், மாதம், சாரம்' தனம்.

எளிதில் நீக்கக் கூடிய வடசொற்களும் பிறசொற்களும் மேலே குறித்துக் காட்டியபடி மிகுதியாய்க் கலந்திருக்கின்றன. தமிழ்மொழி கற்பிக்கும் உரு நூலில் துவக்கத்திலேயே இத்தனை வடசொற்களும் பிறசொற்களும் கலக்குமானல், தமிழ் கற்பார்க்கு இது பயன்றருமாறு யாங்ஙனம்? பொருள் விளங்காத சொற்களுங் கூடக் கலந்திருக்கின்றன. முன்னமேயுள்ள சிறுவர் பாட நூல்களிற் கூட இவ்வளவு வடசொற்கள் காணேம். இதனைப்பற்றி நல்லெண்ணம் எழுத இயலாமைக்கு வருந்துகின்றேன்.

மறைமலையடிகள்
22—9—1939.

குறிப்பு: திரு. வ. சுப்பையாபிள்ளை தாம் முதியோர் கல்வியின் பொருட்டு எழுதி வெளியிட்ட 'தானே தமிழ் கற்குமுறை' என்ற நூலைப் பாராட்டி நூற்றுக் கணக்கான அறிஞர்களும் பெருமக்களும், செய்தித்தாள் ஆசிரியர்களும் மதிப்புரை எழுதி வழங்கியுள்ளார்கள். ஆனல், மறைமலையடிகளார் மட்டும் தமது தனித்தமிழ்க் கொள்கையைப் பெரிதும் நிலைநாட்டுதற் பொருட்டு மதிப்புரை எழுதவிரும்பவில்லை. மேற்கண்ட நூல் தமிழ் எழுத்துக்களையும் சொற்களையும் எளிதிலே உச்சரிப்பதோடு எழுதவும் கற்றுக்கொள்வதற்கு எழுதப்பட்டதாகும். அதனல் தமிழல்லாத பிற சொற்களும் இடம் பெறலாயிற்று.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) 'தமிழ்நாடு' எனப் பெயரிடுவதுபற்றி அமைச்சர் கருத்து

"சென்னைக்குத் 'தமிழ்நாடு' என்று பெயர் வைப்பதால் நமக்கு இலாபம் இருப்பதாகத் தெரியவில்லை. சென்னை மாநிலத்தின் பெயரை மாற்றுவதால் எஞ்சியுள்ள மாநிலங்கட்குக் கிடைத்துள்ள சலுகைகள் கிடைக்காது" என்று கடந்த 13—9—57-இல், குன்றக்குடி முருகன் அருள்நெறி ஆசிரியப் பயிற்சிப் பள்ளிக்கு வருகைதந்த சென்னைத் தொழிற்றுறை அமைச்சர் திரு. ஆர். வெங்கட்டராமன் அவர்கள் பத்திரிகை எழுத்தாளர் ஒருவரின் வினவுக்கு விடைதந்துள்ளார்.

**குறிப்பு:** சென்னைக்குத் 'தமிழ்நாடு' எனப் பெயரிடவேண்டுமென்பது இலாப நட்டக் கணக்குப் பார்த்தல்ல. தமிழருக்கு வேண்டியது தமிழ்நாடு. இது உரிமை வேட்கையின்பாற்பட்ட உரிமை முழக்கமேயன்றிப் பொருளாதாரப் போராட்டமல்ல. தமிழ்நாடு என்று பெயர் மாற்றம் செய்வதால் பிற மாநிலங்கட்குக் கிடைக்கும் சலுகைகள் கிடைக்காமற் போகுமெனின், அஃது ஆட்சிமுறையின் தவறேயன்றி வேறில்லை. உரிமையை இழந்து வாழத் தமிழர் ஒருப்படார். இதனை அமைச்சர் அவர்கள் உணர்தல் நலமென நம்புகிறோம்.

## (உ) "இந்தி பொது மொழியாகுமென்பது வீண்பேச்சு"

"இந்தியை நாம் எல்லோரும் கற்போம்; என்றாவது ஒருநாள் அது நமது நாட்டின் தேசிய மொழியாக விளங்கும் என யாரேனும் நினைத்தால் அது வீண் மயக்கமேயாகும்" என்று 30—9—57-இல் தியாகராய நகர் கலாச்சார சங்க ஆதரவில் நடைபெற்ற கூட்டத்தில் பேசிய திரு. சி. இராசகோபாலாச்சாரியார் குறிப்பிட்டார்.

**குறிப்பு:** தமிழகத்தில் கட்டாய இந்திக்கு வித்தூன்றிய ஆச்சாரியார் அவர்களே இத்தகைய கருத்தினைத் தெரிவிக்கின்றனர் எனில், அஃது அவர் நாட்டுநிலையை நன்கு அறிந்ததன் விளைவே எனல் மிகையாகாது. ஆச்சாரியார் போன்ற மூதறிஞர்களே இங்ஙனம் கூறுவது கண்டேனும் இந்தி வெறியர்கள் தமது மனநிலையை மாற்றிக் கொள்வார்களென நம்புகிறோம்.

## (ங) கட்டாய இந்திக்கு மாணவர் எதிர்ப்பு

சென்ற திங்களில் சென்னை நகரக் கல்லூரிகளில் மாணவர் நடத்திய இந்தி எதிர்ப்பு இயக்கத்தையொட்டி சென்னை சட்டக்கல்லூரி மாணவர்களும் 17—9—57-இல் இந்தி எதிர்ப்புப்போர் நடத்தினர். மாணவர்கள் கல்லூரிக்குச செல்லாமல் இந்தி எதிர்ப்பு ஒலிகளை எழுப்பியவண்ணம் அறப்போர் செய்தனர். பின்னர் கல்லூரிக்கு முன்புள்ள வெளியிடத்தில் நடைபெற்ற கூட்டத்தில் இந்தியை எதிர்த்துப் பல மாணவர்கள் பேசினர். இந்தி பேசப்படாத பகுதிகளில் இந்தியைக் கட்டாயமாகப் புகுத்துவதைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

**குறிப்பு:** மாணவர் உலகிடைத் தோன்றியிருக்கும் இத்தகைய எதிர்ப்புணர்ச்சியை அறிந்து ஆட்சியாளர் இந்திக்குச் சலுகை தந்திடும் போக்கினை மாற்றிக்கொள்வார்களென எதிர்பார்க்கிறோம்.

(ச) தமிழர் நிலைபற்றி திரு. ரா. பி. சேதுப்பிள்ளை யவர்கள் கருத்து

"தமிழ்நாட்டில் இப்பொழுது எங்கு நோக்கினும் தமிழ் உணர்ச்சி கொந்தளித்துக் காணப்படுகிறது. ஆயினும் வெளிநாட்டவர் தமிழ் அருமையையும் பெருமையையும் போற்றிப் பாராட்டிப் பெருமதிப்பு காட்டுமளவுக்குத் தமிழன்நிலை இன்னும் முன்னேறவில்லை" என்று கரந்தை தமிழ்ச்சங்க 46-வது ஆண்டு விழாவில் தலைமைதாங்கிய டாக்டர் திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை யவர்கள் குறிப்பிட்டார்.

**குறிப்பு:** தமிழர் நிலை இன்னும் முன்னேறாமைக்குக் காரணம், மற்ற நாட்டவரைப்போல் தமிழர் தம்மை ஒரு தனி இனம் என்றும், தமக்கென ஒரு தனிச் செம்மொழி, நாகரிகம் இன்ன பிற உளவென்றும் உணராமையேயாகும். அந்த உணர்ச்சி இப்போதுதான் அரும்பியுள்ளது. அதனை வளர்க்க திரு. பிள்ளை அவர்களைப்போன்ற தமிழறிஞர்கள் முன் வந்து உணர்ச்சி யூட்டும்வகையில் தமிழருக்கு வரலாற்று உண்மைகளை எடுத்துக் கூறுவார்களென எதிர்பார்க்கிறோம்.

(ரு) இந்தி பரவும் விதம் காணீர்!

சென்னை மாநிலத்தில் கல்லூரி வகுப்புக்களில் பயிலும் மாணவர்கள் இந்தி மொழியை விரும்பிக் கற்பதற்கென இந்திய மைய அரசினர் உதவிச்சம்பளம் கொடுப்பதெனத் திட்டமிட்டுள்ளனர்.

**குறிப்பு:** தாய்மொழிக்குப் போதிய ஆக்கம் அளிக்காமல் அயல் மொழியாகிய இந்தியை இங்ஙனம் பரவச்செய்யும் வடநாட்டு ஆட்சி யாளரின் இந்தி மொழிப்பற்று எத்துணை வலிமைவாய்ந்தது என்பதை யும், இங்ஙனம் இந்தி தமிழகத்தில் பரவினால் தமிழ்மொழியின் எதிர் காலம் என்னாகும் என்பதையும் இங்குள்ள மாணவர்களும் தமிழன்பர் களும் நன்கு எண்ணிப்பார்த்து, இந்தியின் ஆளுநதன்மையை வேரோடு பெயர்க்க முன்வருவார்களாக.

(சா) பயிற்சிமொழிபற்றி டாக்டர் சுப்பராயன் அவர்கள் கருத்து

"பல்கலைக் கழகங்களில் அந்தந்த மாநில மொழியைப் பயிற்சி மொழியாக்கினால் நாட்டின் ஒற்றுமை கெட்டுவிடும். காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரிவரை ஒரு மொழி பொதுமொழியாக இல்லாவிடில் இந்தியாவின் ஒற்றுமை சிதைந்துவிடும்" என்று டாக்டர். திரு. பி. சுப்பராயன் அவர்கள் கடந்த 20—9—57-இல் சென்னையில் ஒரு கூட்டத் தில் பேசியகாலை குறிப்பிட்டார்.

**குறிப்பு:** காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரிவரை ஒரு மொழி கொண்டு கோலோச்சவிரும்பும் அன்பர் சுப்பராயன் அவர்களின் பரந்த மனப்பான்மை ஓரளவுக்குப் பாராட்டக்கூடியதேயாயினும், இந்த நாட்டு இயல்புக்கும், தமிழகத்தின் தனித்தன்மைக்கும், சிறப்பாக செயல் முறைக்கும் அஃது ஏற்றதன்று. முதலில் அந்தந்த மாநில மொழிகட்கு ஏற்றம் தரவேண்டும். இன்றேல் மாநிலங்கள் விடுதலைவாழ்வு வாழ முடியாமற்போகும். அதுமட்டுமல்ல; பலமொழி, நாகரிகம், பண்பாடு களைக் கொண்ட இந்தியாவென்னும் இத்துணைக்கண்டத்தை ஒரு நாடெனக் கொள்வதும், கொள்ள முயல்வதும் அடிப்படையில் தவறுடைத்தாகும்

### (எ) மாநில மொழிகள்பற்றி திரு. இராசேந்திரர் கருத்து

"மாநில மொழிகளின் வளர்ச்சியைத் தடுத்து இந்தி மொழியை வளர்க்கவேண்டும் என்ற நோக்கம் இல்லை. மாறாக மாநில மொழிகள் வளர்ச்சியடைந்தாலே இந்தி மொழி வளரும், பரவும்" என்று அண்மையில் பூனாவில் 'மகாராட்டிர ராஷ்டிரபாஷா சபைக்' கட்டிடத்தைத் திறந்துவைத்தகாலை இந்தியக் குடியரசுத் தலைவர், திரு. இராசேந்திரபிரசாது அவர்கள் குறிப்பிட்டார்கள்.

**குறிப்பு:** அரசியல் நடவடிக்கைகளில் இந்திமொழி மெள்ள மெள்ள ஆட்சி செலுத்தும்படி செய்தும், இந்தி கற்பார்க்கு ஆதரவளித்தும் இந்தியைப் பரப்புதற்கென அளவிறந்த பொருளைச் செலவிட்டும் வரும் இந்திய அரசின் தலைவரே இங்ஙனம் கூறுவதுகண்டு வருந்துகிறோம். ஒருபுறம் மாநிலமொழிக்குக் கேடு சூழ்வதில்லை யென்ற பேச்சு, மற்றொருபுறம் இந்தியின் வளர்ச்சிக்கு வரிந்துகட்டி நிற்றல் என்ற முரண்பட்ட நிலைகண்டு ஆட்சியாளர்பால் இரங்குதல் அன்றி வேறு என் செய்வதென்றே புரியவில்லை.

### (அ) அனுராசபுரம் தமிழ்க்கழக 6-வது ஆண்டு நிறைவு விழா

12-10-57, 13-10-57 ஆகிய நாட்களிலும், அனுராசபுரம் விவேகானந்த வித்தியாலய மண்டபத்தில் மேற்படி தமிழ்க்கழக ஆண்டு விழா நடைபெற்றது. திரு. மு. வேதாரண்ணியம் அவர்கள் தலைமை தாங்கினார்கள். பல அறிஞர்கள் சொற்பொழிவாற்றினர். கழகத்திற்கு நமது வாழ்த்து உரித்தாகுக.

### (கூ) கொழும்பில் மறைமலை அடிகள் நினைவுவிழா

கொழும்புத் தமிழ்ச்சங்கத்தின் ஆதரவில் கொழும்பிலுள்ள சங்க இல்லத்தில் மறைமலை அடிகளார் நினைவுவிழா சங்கத் தலைவர் வித்துவான் பண்டிதர் கா. பொ. இரத்தினம் அவர்கள் தலைமையில் கொண்டாடப்பட்டது. "மறைமலை அடிகளார் தமிழின் தவப்பயன். பிறமொழிகளின் கலப்பால் தமிழ்மொழி தன் தனித்தன்மையை இழக்கும் நெருக்கடிகாலத்திலே தோன்றிய தமிழ்ப்பெருமலை. தனித்தமிழ் இயக்கத்தின் தந்தை. இன்று தமிழரிடத்துக் காணப்படுஞ் சீர்திருத்த இயக்கங்களுக்கெல்லாம் வித்திட்ட சொல்லேருழவர் தமிழ் மக்களின் கருத்திலே மாபெரும் திருப்பத்தை உண்டாக்கிய தமிழ்ப்பேரறிஞர். உண்மையை அஞ்சாது உரைத்த மாபெரும் வீரர். மக்களின் மனத்தை மாத்திரமன்றிப் பெயர்களையும் மாற்றிய புரட்சி வீரர். நம்மவர் இனிய தமிழ்ப் பெயர்களையே தம் மக்களுக்கு இடுதற்கு முயலுதல்வேண்டும் என்று பண்டிதர் இரத்தினம் அவர்கள் தமது தலைமை உரையிற் குறிப்பிட்டார்.

### (க0) சென்னை ஆளுநர் திரு. ஜான் மறைவு

சென்னை மாநில ஆளுநர் திரு. ஏ. கே. ஜான் அவர்கள் சின்னாட்களாக நோய்வாய்ப்பட்டிருந்து கடந்த 1-9-57-இல் சென்னை மருத்துவ விடுதியில் காலமானார் என்னும் செய்திகேட்டுவருந்துகிறோம். அன்னார் குடும்பத்தார்க்கும், நண்பர், உறவினர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

# மதிப்புரை

**'கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி':**

[இந்நூலின் ஆசிரியர் வித்துவான் ந. சுப்புரெட்டியார் அவர்கள், எம். ஏ; பி. எஸ்ஸி; எல். டி., தமிழ்த்துறைத் தலைவர், அழகப்பா பயிற்சிக் கல்லூரி, காரைக்குடி. இது செல்விப்பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்டது. இதன் விலை ரூபா 2—00. கிடைக்குமிடம்: செல்விப்பதிப்பகம், காரைக்குடி.]

இந்நூல் ஏறத்தாழ எண்ணூறு ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்த நல்லிசைப்புலவர் சயங்கொண்டாரால் பாடப்பெற்றது. இவர் குலோத்துங்க வேந்தன் வேத்தவைப்புலவராவர். குலோத்துங்க வேந்தன் கலிங்கப்பெருநாட்டைத் தன்தானைத்தலைவன் கருணாகரத் தொண்டைமான் என்பவனைக்கொண்டு அறப்போர் நிகழ்த்துவித்து வெற்றி கொண்டனன். அவ் வெற்றியினைச் சிறப்பித்து விளக்குவதே இப்பரணியாகும். 'பரணியிற் பிறந்தான் தரணியாள்வான்' என்பது நம் நாட்டுப் பழமொழி. பரணி நாளிற் பிறப்பதென்பது எல்லார்க்கும் இயல்பாயமைவது அரிது. ஆனால் அறப்போர் வாயிலாகப் பெருவென்றி கொண்டு பரணிநாளிற் கொற்றவைக்குச் சிறப்புச்செய்து அந் நாள் தம் புகழ்ப் பிறப்புநாளாகப் பிறப்பது ஆண்மையார் எவர்க்கும் எளிது. காதல், காவல், கழலடைதல் மூன்றும் எவர்க்கும் சிறப்பாக அமையும் புகழ்ப்பிறப்பு நாட்களாகும். காதலால் திருமணமும், காவலால் பரணியும், கழலடைதலால் தீக்கையும் பெற்றுத் திகழ்வதே இந்நாட்களின் அடையாளமாகும்.

எத்தகைய சிறந்த நூலையும் கற்பதன்முன் பண்டைப்பாயிரம் போன்று இற்றைஞான்று அந் நூலைப்பற்றிய ஆராய்ச்சி நூல் இன்றியமையாததாகும். ஆராய்ச்சி நூல் விளக்கும் வழிகாட்டியுமாக நின்று விழுத்துணைபுரியும். பழுத்த பேராசிரியர் உடனிருந்து ஐயமகற்றி உதவுவதுபோன்று அந்நூல் உதவும். அம்முறையில் இந்நூலும் குறைவிலா நிறைவாய் அமைந்துள்ளது. ஆசிரியர் 'தென்தமிழ்த் தெய்வப் பரணி முதல் சயங்கொண்டார் ஈறாக' ஒன்பது தலைப்புக்களாக வகுத்து நன்காய்ந்து விளக்கியுள்ளார். நடை ஆற்றொழுக்கும் எளிமையும் இனிமையும் விஞ்சியுள்ளது. வரலாற்று நூற்கள், கல்லெழுத்து, செப்புமுறி, இலக்கண இலக்கியங்கள் முதலிய புறச்சான்றுகளும், அவற்றோடியைந்த அகச்சான்றுகளும் அங்கங்கே எடுத்துத் தொடுத்தமைத்து விளக்குந்திறம் மிகவும் வியப்புடன் போற்றத்தக்கது. ஆகவே இந்நூலை எல்லாரும் வாங்கிக் கற்று இன்புறுவார்களாக. அழகிய நல்ல பதிப்பும் கட்டடமும் அமையப்பெற்றது. நம் தமிழன்னைக்கு இப்புதுப்பணியணி நின்று சிறப்பதாக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்; வ. சுப்பையா.



பேராசிரியர்

**ஆ. கார்மேகக் கோனர்**

**தோற்றம்: 1889.** **மறைவு: 1957.**